*Kumaraṉ*

*Āram 6, muttu 50*

*July 25, 1929*

Record no. 313

Reg.No. M. 1823. 16 பக்கங்கள். விலை 0-1-6



# குமரன்

The "Kumaran" Published Every Thursday.

ஆரம் ௬ } காரைக்குடி சுக்கில-ஆடி-மீ ௧௦-உ வியாழக்கிழமை (25—7—1929.) { முத்தை ௭௦.

வாரப்பதிப்பு

சந்தா விபரம்.

உள்நாடு வருடம்
ஒன்றுக்கு ரூ. ௩-0-0
ஆறு மாதம் ௧-0-0
பிரதி ௧-க்கு 0-௧-௬
வெளிநாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. ௪-0-0

# குமரன்

"என் கடன் பணிசெய்து கிடப்பதே"

மாதப் பதிப்பு

சந்தா விபரம்.

உள்நாடு வருடம்
ஒன்றுக்கு ரூ. ௧-௮-0
வெளிநாடு வருடம்
ஒன்றுக்கு ௨-0-0
தைமீ வருடாரம்பம்

"சுதந்ரே உயிர்"  "கருணையே தெய்வம்"

# பாரதியார் தமிழ்ப் புலமை.

திருவாளர் எஸ். சோமசுந்தர பாரதியார் எம். ஏ., பி. எல்.

காலஞ்சென்ற சுப்பிரமணிய பாரதியார் தன்னிகரற்ற தமிழ்ப் புலவர். நமக்கு அணுகிய காலத்தராகவே, இவர் கவி நலத்தினுயர்வை உள்ளபடி அளந்தறிவ தரு மையாகும். வெறுப்பவரும் நயப்பவரும் நடு நிலையின்றி அவரியல்புகளைக் கடையிறந்து காண்பாராவர். நங்கால நிகழ்ச்சிகளில் ஈடு பட்டு, நவீன ஆதர்சத்தால் ஆகர்ஷிக்கப்பட்டு நம்மிடையே பாடும் நங்காலப் புலவ ரொருவரின் கவிகளை மதிமிஞ்சிப் புகழ்வாரும், வெறுத்து மிகப் பழிப்பவரும் பலராவர். ஆனால் இத்தகைய புலவரின் கவிகளை, கவி நல மறிவதன்றிப் பிறிது நோக்கங் கொள்ளாது, தம்முணர்வு கவரவிடாது படிப்பதும், படித்த வற்றி னியல்பளந்தறிவதும் மிகச் சிலர்க்கே யாவதாகும். நடுமை நல்லறிவாளர் பாரதியார் கவித்திறமறிந்து கூறும் நயவுரைகள் காணும்வரை, மற்றவர் இப்புலவர் கவிதை நலங் காணமுயல்வது தவறென்பது சாலா தன்றே? ஆனவரை இத் தமிழ்ப்புலவர் கவி நலத்தை யாராய்வேன். முற்றத் துணிந்த முடிவுகாண வல்ல முதுக்குறைவுக் குரிமை கேளேன் எனினும், இயன்றவரை பொறு மையோடு பாரதியாரின் கவித்திறத்தை யாராய்ந்து கண்டமுடிபுகளை வெளியிடுவ தால், மற்றைத் தகவுடைய பெரியாருண்மைக் கருத்துக்களை வெளியிடச் செய்யவுங் கூடுமா தலால் இம்முயற்சியிலொரு சிறிது தலையிடத் துணிந்தேன்.

முதலில் தற்காலத் தமிழ்ப்புலவர் சங்கேதங் களுக்கு, பாரதியார் பெரும்பாலும் புறப்புறச் சமயியாவர். நாகபந்தங்களும் ஏகத்தாளித வகவல் எமக வந்தாதிகளும், புலமைத் தலைக் கோலாக் கருதும் பாவலரிடையில், சித்திர கவிச் சத்துருவான பாரதியார் பாக்கள் மதிக் கப்படுவே தருமையேயாகும். மனோபாவ வறு மையோடு பொருளும் வறண்ட தற்காலப் புலமைவனம், அழகொடு மணஞ்செயு மலர் களேனும், கொழுவிய தண்சுவைக் கனிக ளேனும் தரவொண்ணு அடர்ந்திருண்டு காழ்த்து மலிந்த இலைச்செடிகளானும் புதர் களானுமே நிறைந்து தோன்றுவதியல்பாகும். தற்காலம் தழைகளே தழைவதாகவே, மண மற்ற தழைமாலைகளே பெரும்பாலுமிடையப் படுகின்றன. அழகு மண முதலிய இயற்கை நலமில்லாததாகவே, தழைகளை வினைத்திற மலியப் பலவாறு தொடுத்து, அடுக்காலுந் தொடையானும் பல்வேறுபட்ட இலைமாலை களையே பலரும் மிடையலாவர். இவ்வனத் திடையே தளரா ஊக்கமுடையானொரு புலவன், வெறுஞ் செடி களைந்து, நிலந்திருத்தி உணர்வு நீர்வார்த்து உரன்கதிரூட்டி வளர்த்த நல்ல தமிழ்ப் பூந்தோட்டத்தில் நறுமலருஞ் சுவைக்கனியுங் காணப்பெற்றால், அஃது அவ் வனத்தியல்புக்குப் பொருத்தமற்ற அபூத விளை வாகவே தோன்றும். பாரதியார் பாக்கள் இவ் இலைவனத்திடை எழுந்த கனி மலர்த் தோப்பாம்.

இவர் பாக்கள், கருத்துக்களை வருத்தமின்றி விளக்கும் பண்டைப்பாவலர் பளிங்குநடை பயின்று, இளகியொளிரும் வெண் பொன் னொழுக்கும், இனிய ஓசையும் திட்பமும், சுவையுமுடையன. இப்புலவர் நூல் படிப்ப வருக்கு நிகண்டகராதிகள் வேண்டா. கள்ள மற்ற உள்ளமும், ஊன்றிய கவனமும், தமி ழிலார்வமு முடையாருக்கு இப்புலவரிதயம் வெள்ளிடை மலையாம். எளிய இனிய இவர் கவிநடை, நீரொழுக்குடையதேனும் வயிரத் தின் திண்மையுமொளியும் பெற்று நிற்கும்.

"கண்ணிரண்டும், ஆவலிழுக்கு மதிசய
[த்தைக் கூறுவனே"
மீள விழியில் மிதந்த கவிதை யெலாம்
சொல்லி லகப்படுமோ?"

"நீலத் திரைக்கட லோரத்திலே—நின்று
நித்தந் தவஞ்செய் குமரியெல்லை—வட
மாலவன் குன்ற மிவற்றிடையே—புகழ்
மண்டிக்கிடக்குந் தமிழ்நாடு"

'(எங்கள் தாய்)செப்புமொழி பதினெட்டுடை
[யாள், எனில்
சிந்தனை யொன்றுடையாள்'

"பூதலமுற்றிடும் வரையும்—அறப்
போர் விறல்யாவும் மறப்புறும் வரையும்
மாதர்கள் கற்புள்ள வரையும்—பாரில்
மறைவருங் கீர்த்திகொள் ரஜபுத்ர வீரர்."

'நாமிருக்கு நாடுநம தென்பதறிந்தோம்—இது
நமக்கே யுரியதா மென்ப தறிந்தோம்—இந்தப்
பூமியிலெவர்க்குமினி அடிமை செய்யோம்—
[பரி
பூரணனுக்கே யடிமை செய்து வாழ்வோம்."

"தெற்கு, மாகடலுக்கு நடுவினில் அங்கோர்
கண்ணற்ற தீவினிலே, தனிக்காட்டினிற்
[பெண்கள்
புழுங்குகின்றார் அந்தக்—(கரும்புத் தோட்டத்
[திலே")

"மதியுண்டு, செல்வங்கள் சேர்க்கும்-தெய்வ
வலியுண்டு, தீமையைப் பேர்க்கும்,
விதியுண்டு, தொழிலுக்கு விளைவுண்டு குறை
[வில்லை,
விசனப் பொய்க் கடலுக்குக் குமரன்கைக்
கணையுண்டு, ஜயமுண்டு பயமில்லை மனமே.

"மாலைப்பொழுதிலொரு மேடைமிசையே
வானையுங் கடலையு நோக்கியிருந்தேன்.
மூலைக் கடலினையவ் வான வளையம்
முத்தமிட்டே தழுவி முகிழ்த்தல் கண்டேன்.
நீலநெருக்கிடையில் நெஞ்சு செலுத்தி
நேரங்கழிவதிலும் நினைப்பின்றியே
சாலப் பலபல நற்பகற் கனவில்
தன்னை மறந்தலயம் தன்னிலிருந்தேன்."

இவைய உருகுபொன் னொழுக்குடைய ஒப்பற்ற இனிய அடிகளைப் படிக்குந்தோறும் நாவும் கேட்குந்தோறுஞ் செவியு மினிக்கும்.

அணியினம் அனைத்துக்குந் தாயான உவ மையைக் கையாளுவதில் இப்புலவர் பண் டைப் பாவலர் யாருக்கு மிளையாதவர். இக் காலத்திலிணையற்றவர். வருந்தித் தேடிப் பொருந்தச் செய்யும் புலவர் அணிகளைப் போலன்றி, பாரதியாரின் உவமைகள் இயற்கையினின்று இவர் வாக்கைத்தேடி வந்தடையும். கருத்துக்குப் பொருத்தமுடைமை யோடு கேட்போர் மனத்திற்பதிந்து மறையா துறையுஞ் செவ்வியுடையவாம் இவர் உவமை யனைத்தும். இயற்கையினின்று எளிதிலெடுத்து, தன்கவிதை யமுதநுச்சி இவராளு முவமைகள், இப்புலவர் நற்பனைத்திறனையும், ஒப்புணர் தேர்ச்சியையும், கலிவலை கைவினை முதிர்ச்சியையும், அநாயாச ஆட்சியையும் இனிது காட்டும். பழம் பாட்டுகளைத் தருவி, பண்டை யுவமைகளையுருவி, தம்புலமை நிறுவக்கருவியாக்கும் இழி செயலையறவே வெறுத்தவர் இப்புலவர்.

"விண்ணகத்தே இரவிதனை வைத்தாலும்
அதன்கதிர்கள் விரைந்து வந்து
கண்ணகத்தே யொளிதருதல் காண்கிலமோ?
நின்னையலர் கனன்றிந் நாட்டு
மண்ணகத்தே வாழாது புறஞ்செய்தும்,
யாங்களெலா மறக்கொணாதெம்
எண்ணகத்தே, லாஜபதி, இடையின்றி
நீவளர்தற் கென்செய் வாரோ?"

எனவும்,

"தேனை மறந்திருக்கும் வண்டும்,—ஒளிச்
சிறப்பை மறந்துவிட்ட பூவும்,
வானை மறந்திருக்கும் பயிரும்—இந்த
வைய முழுதுமில்லை, தோழி'
"கண்ணன் முகமறந்து போனால்—இந்தக்
கண்கள் இருந்து பயனுண்டோ?"

என்றும்,

"பாயுமொளி நீ யெனக்கு,—பார்க்கும் விழி
[நானுனக்கு
தோயுமது நீ யெனக்கு,-தும்பியடி நானுனக்கு'
'பானமடி நீ யெனக்கு-பாண்டமடி
[நானுனக்கு'
'வீசுகமழ் நீ யெனக்கு—விரியுமலர்
[நானுனக்கு'
'பேசும்பொருள் நீ யெனக்கு—பேணுமொழி
[நானுனக்கு'

என்றும்,

'மண்ணிலின்பங்களை விரும்பிச்
சுதந்திரத்தின் மாண்பினை யிழப்பாரோ?
கண்ணிரண்டும் விற்றுச் சித்திரம்வாங்கினால்
கைகொட்டிச் சிரியாரோ?'

எனவும் வருவன பல உவமைகளையுங்காண்க. உவமான உவமேய இயைபுகளும், அடை களி னழகும், கவிகளில் இவற்றின் அமைப் பும் விசதமாயெடுத்து விரிப்பதானால் இவற் றிற்கே பல வியாசங்கள் வேண்டும். கேவலம் பண்புகளையும் மனோபாவ எண்ணங்களை யுமே உருவகப்படுத்தி, அவற்றினுதவி கொண்டு தங்கோள் நிறுவுதலில் இவர் கைவந்தசமர்த்தர். கண்ணனைக் காதலி பாவமாக்கித் தன் காதல் பாடும் பக்தன் வாயில்,

'வீரமடிநீ யெனக்கு—வேந்தியடி நானுனக்கு'......என்றிவர் கற்பித்த கவிதை நயங்கருதி நயவாதிருக்க முடியாது. இன்னும் ஓசைகளினுதவிகொண்டே சொற்களின் தன்மையையும் பொருளையும் மாற்றி, இலக்கிய நலம் வளர்க்கும் ஆரியம், ஆங்கில மன்ன பிற சில மொழிகள் போலன்றித் தமிழில் மொழிகளை எளிதில் மாற்றொணு தென்றும், நிலைத்தவுருவங்களுடைய தமிழ்ச் சொற்கள் வேறுபாடு காட்டுதற்குப் பிற சொற்களோடு ஒட்டித்தான் ஆகவேண்டு மெனவுங் கருதுவார் பலருண்டு. தமிழிலக்கண நுணுக்கங்களையாராய்ந்து தெளிவோர், தமிழ் கேவலம் ஒட்டுமொழியன்று; ஆரியம்போல் அசைபேற்று மாற்றங்காட்டுஞ் செவ்வியை யுடைமையோடு ஆங்கிலம்போல் சொற் கட்டறுத்துப் பிரிவு நிலையையுமடைந்துள தென்பது இவர் அறியலில்லார். இஃதெப்படி யாயினும் அருந்தமிழ்ப் பெரும்புலவர் இவர் கருதுமாறிடர்ப்படுவதில்லை. 'துயர்' 'மறை' என்னும் பெயர்ச்சொற்களினின்று, 'துயரினன்' 'மறைத்தனன்', என்று அநாயாசமாய் வினைகளாக்கித் தமிழாக்கக்கண்ட கம்ப ரன்ன பழம்பெரும் புலவர் தமிழ்த்திறம் இற வாது நின்று நிலவுகிறது. உரனேடு ஊக்க முடைய தமிழ் வாணரால் இன்றளவுங் கையாளப்படுகின்றது. தப்போடுணிவுடை யார் தூய கவிகளில் இந்நலம் செப்பமொடு செழுமையுங்காட்டி, தமிழென்றும் வாழும், வாழுமென்னும் இறவாமெய்ம்மையும் இனிது விளக்கி நிற்கும். பாரதியார் இத்திறங்கை வந்த கவியென்பதை அவர் பாக்களிற் பரக் கக் காணலாம். இதற்கீண்டு ஒரே சான்று காட்டிப்போவேம். 'உறவென்றும் நட்பென் றும் கதைக்கிறான்' என்று சுயோதனன், பாஞ் சாலி சபத நூலில், தன் தந்தையை வெறுத் துக் கூறுமிடத்து வரு மிப்பிரயோகம் போலவே பாரதியார் பனுவல்களில் பலவேறிடத்தும் இப்புலமை நலமொளிரக் காண்போம்.

பாரதியார் பாட்டுக்களில், சொன்னைக் கதைகள்,—'கன்னுலந் செய்யுங் கருத்துடை யேன்;—'பிச்சைச் சிறக்கி செய்த பேதகத் தைப் பார்த்தாயோ?'— 'கட்ட கடுகீசியின்' 'பட்டப்பகலிலே பாவி மகன் செய்தியைப் பார்'—'கள்ளத்தைக்கொண்டொரு வார்த்தை சொன்னால் அங்கு காறி யுமிழ்ந்திடுவோன்'— 'காட்டுவழியானாலும், கள்ளர் பயமானா லும்'— 'தாலிகட்டும் பெண்டாட்டி சந்ததி கனேதுமில்லை' நீசக் குழியிலே நினைப்பழியாப் பொய்ம்மையே'— 'நின்றந் மோடி சிறக்கு தடி தலையை— கல்லமொங்கைப் பழைய கள்ளைப்போலே'—' என்றிவ்வாறு பலவிடத் தும், பாட்டுக்கும் பாத்திரங்களுக்கும் பொருத் தமாக நடப்புச் சொற்களையும் தொடர்களை யும் நயம்பட எடுத்தாளும் புலமைத்திறனுங் கவிநலமுங் கனிந்த கவினும்.

இவரை ஆசில் மதுரகவி யென்ன லாம். இவர் சித்திரகவிக்கு மித்திரரல்லர். விஸ்தார கவிகளைப் போற்றி யாட் சிப் படுத்தினராயினும், பண்டை முறைப் படி விஸ்தாரப்படுத்தி யாதொரு நூலுஞ் செய்ய இவர் விரும்பினதாகத் தெரியவில்லை. வேனிலத்த பாஞ்சாலி சபதமொன்று சில சிறு காவியங்களும், அச்சேர் செற்றுரு வன்ன சில ஒரு முறைக்காதற் பனுவல்களும் இவர் செய்தனருண்டு. இவை யாவும் ஒரு பொருள் முதலிய பகுதிகளைக்கோவைகளின் கண்ணன் பாட்டும், சுதேச கீதங்களுமே தலைசிறந்த சிறப்புடையனவாம். இவற்றுள், கவிதோறுஞ் சுவையூற்றெழும், அடிதோறும் கமழும் கண்டும், தேவிட்டா காவதி நுவ தாம்.

குமரன் பிரபவ ஆனிமடல்.

——

பார்ப்பனீயத்தை ஒழியுங்கள்.





சுயமரியாதை வாழ்வே சுக வாழ்வு.







## திருநெல்வேலி சுயமரியாதை மகாநாடு.

(நமது அருப்புக்கோட்டை நிருபர்)

திருநெல்வேலி ஜூலை-மீ 21 உ.

இந்த ஜில்லாவின் இரண்டாவது சுயமரியாதை மகாநாடு நேற்று வெகு விமரிசையாகக் கூடியது. ௧௧ உ மாலையில் திரு. முருகப்பா, திரு. பிச்சப்பா சுப்ரமணியம் ஆ. சுப்பய்யா, திருமதி. மரகதவல்லி, ஆகியவர்கள் காரைக்குடியினின்றும் வந்துசேர்ந்தனர். இரவு அருப்புக்கோட்டையினின்று திருவாளர்கள் சொக்கலிங்க பாண்டியர், (நாடார்குலமித்திரன் உப அதிபர்) தி. கருப்பையா, ஆசிரியர், சிவசுப்பிரமணியம் ஆகியவர்கள் வந்துசேர்ந்தனர்.

இன்று காலை ௯-௩௦ மணிக்கு ராமசாமிப் பெரியார், ராமச்சந்திரன் பி. ஏ. பி. எல். சிவகெங்கை, எஸ். வி. லிங்கம், அழகர்சாமி பொன்னம்பலனுர், ஏ. எஸ். அருணசலம், எஸ். குருசாமி, (ரிவோல்ட் உதவி அதிபர்) ப. ச. தண்டபாணி, K. ராமசாமி ஆகியவர்கள் வந்தனர். புகைப்படம் பிடிக்கப்பட்டது. தலைவர்கள் மோட்டார்வாகனத்தில் வைத்து, யானை, மேளதாளங்களுடன் ஊர்வலமாக முக்கிய வீதிகளின் வழியாகக் கொட்டகைக்கு அழைத்து வரப்பட்டனர். பின் திருவாளர் டாக்டர் செட்டோ அவர்கள் திருமதி மரகதவல்லியம்மையாரை சுயமரியாதைக் கொடியை ஏற்றுமாறு கேட்டுக்கொள்ள நீண்டகரகோஷத்துடன் திருமதி அம்மையார் தமது சொற்பொழிவை ஆற்றி (அவரது சொற்பொழிவு பிறிதோரிடத்தில் வெளியிடப்பட்டிருக்கிறது.) சுயமரியாதைக் கொடியை ஏற்றியபின் முதலாவதாக திரு. சின்னமணி பாகவதர் அவர்கள் சுயமரியாதைக் கீதம் பாடினர்.

### எஸ். குமாரசுவாமி.

பின் திருவாளர் S. குமாரசாமி செட்டியார் பி. ஏ. பி. எல். அவர்கள் சுயமரியாதை இயக்கம் குறித்தும், போலித் தேசிய வாதிகளின் தர்மம் குறித்தும் வர்ணாச்சிரம தர்மிகளைக் கண்டித்தும் பேசி கரகோஷத்துடன் மகாநாட்டைத் திறந்துவைத்தார். அவர் பேச்சின் ஒரு பகுதி வருமாறு:—

சுயமரியாதை இயக்கமும், அதன் ஸ்தாபனங்களும் ஒவ்வொரு நாட்டிலும் அமைக்கப்பட வேண்டுமென்பதன் அவசியத்தை உங்களுக்குநான் சொல்லவேண்டியதில்லை. அதை நீங்களே நன்கு அறிவீர்கள்.

பம்பாயில் சமீபத்தில் திரு அம்பத்கார் தலைமையின் கீழ் மிகச்சிறப்பாக சுயமரியாதை மகாநாடொன்று நடந்தது. பின்னும் வடநாட்டிலுள்ள பல நகரங்களில் நம் இயக்கம் பரவியிருக்கிறது. நீங்கள் பத்திரிகைகளில் படித்திருப்பீர்கள். இந்த இயக்கம் உலகம் முழுவதிலும் பரவும் என்பதற்கு உங்களுக்கும் எனக்கும் ஒரு சிறிதும் சந்தேகமேயில்லை நம் சகோதரி மரகதவல்லியம்மையார் கொடியை ஏற்றி நிகழ்த்திய சொற்பொழிவில் வருணசிரமத்தின் கொடுமையினுலேயே நம் நாடு கெட்டுப்போயிற்றென்ற பொருள்பட பேசியுள்ளார்கள். வருணசிரமதர்மத்தை அனுசரிக்கும் ஒரு சிலராலேயே நாம் இதுகாறும் கேடுற்றோமென்பதில் ஒரு சிறிதும் சந்தேகமில்லை.

நம் சுயமரியாதை இயக்கம் இன்று தோன்றியதன்று அது முதற்காலத்திலிருந்தே தாண்டவஞ் செய்துகொண்டிருக்கிறது. ஒன்று இரண்டு ஆண்டுகளாக நமது இராமசாமியாரால் புத்துயிர் அளிக்கப்பட்டு திருநடனஞ் செய்து வருகிறது. நம் சுயமரியாதை இயக்கம் முற்காலத்திலிருந்தே இருக்கிறதென்பது நம் பெரியோர்களுடைய பாட்டுகளிலெல்லாம் காணக்கிடக்கின்றது. பல ஆண்டுகளுக்கு முன்னே திருவனந்தபுரம் மகாராஜா காலேஜில் ஆசிரியராக விருந்தவரும் "மனோன்மணீயத்" தின் நூலாசிரியருமான எம். ஏ. சுந்தரம் பிள்ளையவர்கள் தம்முடைய நூலில்,

"வள்ளுவர் செய் திருக்குறளை
  மறுவற நன்குணர்ந்தோர்கள்
உள்ளுவரோ மனுவாதி
  ஒரு குலத்துக்கொரு நீதி"

என்று சொல்லியிருப்பதே ஓர் நற்சான்றாகும். நம் சுயமரியாதை இயக்கத்தின் முக்கிய கொள்கையாவது சாதிபேதத்தைக் கற்பிக்கும் வர்ணாசிரமத்தைத் தொலைத்து, நாம் சுயமரியாதையோடு வாழ வேண்டுமென்பதேயாகும். நம் இயக்கத்தைச் சிலர் (எதிரிகள்) நாஸ்திக இயக்கமென்று சொல்லுகிறார்கள். அங்ஙனம் அவர்கள் சொல்வதெல்லாம் சுத்தப் பிசகு. நம்மைப்போன்று கடவுளிடத்து அன்புடையோர் எவருமிரார் நாம் சொல்வதெல்லாம் கடவுள்பேரால் அநாவசியமாக, வீணைப் பொருளைச் செலவுசெய்ய வேண்டாமென்பதேயாகும். அப்படிச் செய்கின்ற வழக்கத்தைத் தவிர்ப்பதே நம்முடைய கொள்கையாகும். நம் இயக்கம் நன்கு நாட்டில் வளருமாறு இந்த மகாநாட்டைத் திறந்துவைக்கிறேன்.

### ஆர். சுப்பையா.

வரவேற்புக் கழகத்தலைவர் திரு ஆர். சுப்பையா அவர்கள் தமது சொற் பெருக்கைச் செய்தார். அவரது சொற்பெருக்கில் ஒரு பகுதிவருமாறு:—

### உயர்வு தாழ்வு.

பார்ப்பனரால் ஏற்படுத்தப்பட்ட அநீதித்தப் பொருத்தமற்ற சட்டங்களையும், அவைகள் இன்னும் அழிவிருந்தே தீரவேண்டுமென்னும் பார்ப்பனரையும் எதிர்ப்பதே சுயமரியாதை இயக்கம். மேல் ஜாதி கீழ்ஜாதி என்னும் ஆரியரது கொள்கையை அறவேயொழித்து "பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையால்" என்னும் பண்டைத் தமிழரின் கொள்கையை நிலைநாட்டுவதே சுயமரியாதை இயக்கம். அறிவுச்சுடராய் நீதியின் நிலையமாயிருந்த ராஜாராம் மோகன்ராய், தயானந்தசரஸ்வதி ஈஸ்வரச்சந்திர வித்தியாசாகரர், வீரேசலிங்கம் பந்துலு, ரங்காராவ் என்ற ஸ்வாமி ஈஸ்வரானந்தர், ஜஸ்டிஸ் சதாசிவய்யர் போன்ற பார்ப்பனரை ஆதரித்துப் போற்றுவதே சுயமரியாதை இயக்கம். ஆகவே, எக்குடியிற் பிறப்பினும் யாவரேயாயினும் ஒருவர் சமூகக் கொடுமைகளையும் அறிவிற்குப் பொருந்தாத பழக்க வழக்கச் சட்டங்களையும் ஆதரிப்பாராயின் அவரை எதிர்த்து அவரது கொள்கைகளின் ஆதிக்கத்தை அழிக்க முன்வருவதே சுயமரியாதை இயக்கம்.

### கடவுளும் நமது இயக்கமும்

தவிர சுயமரியாதை இயக்கம் கடவுள் உண்டா? இல்லை? என்ற கேள்விகளிலேயே தலையிடவில்லை. கடவுள் ஒருவர் இல்லையென்று நிரூபிக்க ஒருவரும் முன்வரவில்லை, அவ்வாறே கடவுள் ஒருவர் உண்டு என்று வாதாடவும் முன்வரவில்லை, அத்தகைய தர்க்கங்களே சுயமரியாதை இயக்கத்திற்கு அவசியமல்ல, ஆயினும், கடவுள் ஒருவர் உளரேல் அவர்பெயரால் அனுஷ்டிக்கப்படும் பழக்க வழக்கங்களிலே அநேகம் நம்மைப் பன்னூறு ஆண்டுகளாய் அடிமைத்தனத்திலும் தரித்திரத்திலும் பிறர் எள்ளி நகையாடும்படியான மிருகத் தனத்திலும் ஆழ்த்தி விருப்பதோடு இப்பொழுதும் கணக்கிலடங்காத பொருள் அவர் பெயர் சொல்லி வீணே இத்துறைகளில் விரயமாக்கப்பட்டு ஒரு மனிதனுவது நன்னெறியடையக்கூடிய நிலைமையில் உபயோகப் படுத்தப்படாமலிருந்து வருவதால் அவைகளைச் சீர்திருத்த வேண்டுவதே தனது முக்கிய கடமைகளிலொன்றாகக் கொண்டதே சுயமரியாதை இயக்கம், வியர்வை வடிய பெருமுயற்சியெடுத்து ஈட்டப்பட்ட பொருள் நற்காரியங்களுக்கு உபயோகிக்கப் படாமல் ஒரு பகுதியினர் மட்டும் சோம்பேரித்தனமாய் ஏகபோகமாயனுபவித்து நாட்டையும் மக்களையும் பாழ்படுத்துவதைத் தடுக்க முயற்சிப்பதே சுயமரியாதை இயக்கம். இந்த இயக்கம் நாஸ்திக இயக்கமாகுமா? சுயமரியாதை இயக்கம் நாஸ்திகத்தைப் பரப்பி வருகிறதென்று பறையடிக்கும் இத்துக்கள் தங்களது மதத்தையே தெரியாது கருதுகின்றனர். ஆகவே, இத்துக்கள் சுயமரியாதைக் காரர்களைக் குறைகூறுவதில் அர்த்தமில்லை. சுயமரியாதைக் காரர்களும் கடவுள் இல்லையென்று சொல்லவில்லை. கடவுளைப் பற்றிய விசாரணை தேச சமூக முன்னேற்றத்திற்கு அவசியமில்லையென்றே கூறுகின்றனர்.

## ஓ. தணிகாசலஞ் செட்டியார் காலஞ் சென்ருர்.

சென்னை ஸ்மால்காஸ் கோர்ட்டு சீப் ஜட்ஜி திவான்பகதூர் ஓ. தணிகாசலம் செட்டியார் ஆடி-மீ ௬-உ காலை ௧௦ மணிக்கு எழும்பூரில் தமது ஜாகையில் மரணமடைந்தார். அவர் சிறிது காலமாக தேக அசௌக்கியமாகவிருந்தார். அவர் ௧௮௭௦-ம் வருஷத்தில் பிறந்தார். முத்தியாலுபேட்டை ஹைஸ்கூலிலும் பிறகு கிறிஸ்தவக் கலாசாலையிலும் படித்து அவர் பி. ஏ. பரீக்ஷையில் தேறினர். பிறகு அவர் ஷார்ட்டு அண்டு பிரூல் என்ற சொலிஸிட்டர் கம்பெனியில் சேர்ந்து பி. எல். பரீக்ஷையில் தேறி முதலில் சொலிஸிட்டராகவும், பிறகு வக்கீலாகவும், அட்வகேட்டாகவும் பதிவு செய்துகொண்டார். அவர் முத்தியாலுபேட்டை ஹைஸ்கூல் டைரக்டராகவும், பிறகு தலைவராகவும், பச்சையப்பன் தர்மங்களின் டிரஸ்டியாகவுமிருந்தார். கிறிஸ்தவக் கலாசாலை தினசரி சங்கத்தின் காரியதரிசியாகவும் கொஞ்சகாலமிருந்தார். ௧௯௧௭-ம் வருஷத்தில் அவர் கார்ப்பொரேஷன் மெம்பராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ௧௯௨௪-ம் வருஷத்தில் கார்ப்பொரேஷன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ௧௯௧௮-ம் வருஷத்தில் ஜஸ்டிஸ் கட்சியில் சேர்ந்தார். அவர் அக் கட்சியைத் தீவிரமாகத் தாங்கினர். ௧௯௨௦-ம் வருஷத்திலும், ௧௯௨௩-ம் வருஷத்திலும் அவர் சென்னைச் சட்ட சபைக்கு இரண்டு தடவை சேர்ந்தாப்போல் தேர்ந்தெடுக்கப்பட்டார். ௧௯௨௬-ம் வருஷ முனிசிபல் தேர்தலில் அவர் தோல்வியடைந்தபின் கார்ப்பொரேஷன் மெம்பராகக் கவர்ன்மெண்டால் நியமிக்கப்பட்டார். இவ் வருஷ ஆரம்பத்தில் அவர் ஸ்மால்காஸ் கோர்ட் சீப் ஜட்ஜியாக நியமிக்கப்பட்டார். அவருக்கு மனைவியும், மூன்று பெண்களும், நான்கு பிள்ளைகளுமிருக்கின்றனர்.

### தகனக்கிரியை.

ஸ்ரீமான் செட்டியாரவர்கள் பிரிவுற்றதைக் கேட்டதும், சென்னையிலுள்ள பிரதம புருஷர்கள் பலரும், அவரது நண்பர்களும் திரள் திரளாக வந்து துக்கம் விசாரித்தனர். அவரது உடல் திரளான ஜனக்கூட்டத்துடன் ஊர்வலமாகத் தகனக்கூட்டத்திற்கு எடுத்துச் செல்லப் பெற்றது. அங்கு அவரைப் பாராட்டிப் பலர் சொற்பொழிவு செய்தனர். அடுத்தநாள் ஹைக்கோர்ட்டில் பிரதம நீதிபதிகள் முன்னிலையில் அட்வொகேட் ஜெனரல்அல்லாடி கிருஷ்ணசாமிஐயரவர்களால் அநுதாப உரைகள் கூறப்பெற்றன. பின்னர் பிரதம நீதிபதி பதிலளித்து அநுதாபம் வழங்கினர் ஸ்மால்காஸ் கோர்ட்டிலும் அநுதாபம் கூறப்பெற்றது. அவரது பிரிவின் ஞாபகார்த்தமாகக் கார்ப்பொரேஷன் ஆபீசும் பல பொது நிலயங்களும் அன்று மூடப் பெற்றன.

காலஞ் சென்ற
திவான்பகதூர் ஓ. தணிகாசலஞ் செட்டியார்.

### பழக்க வழக்கம்.

இந்திய மக்களை ௬௦௦௦-க் கணக்கான ஆண்டுகளாய் அன்னியர்களுக்கு அடிமைப்படுத்தி யிருப்பதற்குக் காரணம் இந்துக்களது ஜாதிக் கட்டுப்பாடும் மூடப் பழக்க வழக்கங்களும் அநீதியான சட்டங்களும் என்பதனை இயற்கை அறிவுள்ள ஒவ்வொருவரும் எளிதிலறியலாம். சாதிப் பிரிவினையால் சகோதரத்துவ உணர்ச்சியின்றி இந்துக்கள் சீரழிந்து போயின ரென்பதை ஒருவாறு ஒத்துக் கொள்ளலாம் பழக்க வழக்கச் சட்டங்கள் அவர்களை எவ்வாறு கோழைகளாக்கிற்றென்று நீங்கள் கேட்கலாம். உதாரணமாக விதவா விவாக மின்மையும், மனைவிக்கும், பெண் மக்களுக்கும் தம் குடும்பச் சொத்திற் பங்கின்மையும் இந்துக்களைக் கோழைகளாக்கிய முக்கிய காரணங்களிற் சில என்பதனை நீங்கள் உணரலாம். எவ்வாறெனில், நாம் உயிர்துறப்பின் நம்பால்ய மனைவியென் செய்வாள்? மானத்தைவிற்று, அன்றிப் பிற மதம் புக்கு அன்றோ பிழைத்தல் வேண்டும்? குழந்தைகள் என் செய்யும்? என்ற பயத்தினாலேயே ஒரு இக்கட்டான நிலை[illegible] வேண்டுகின்றது. இப்பொழுதும் இந்துக்களில் விதவா விவாகத்தை அனுஷ்டிக்கும் மறவர், தோட்டியர், ஆதிதிராவிடர் வீரர்களாயிருப்பது இதனை வலியுறுத்தும். அவ்விபத்து

(௧௨-ம் பக்கம் பார்க்க)

## மரகதவல்லியார் சொற்பெருக்கு.

ஜூலைமீ ௨௦, ௨௧ தேதிகளில் திருநெல்வேலியில் நடைபெற்ற திருநெல்வேலி ஜில்லா ௨-வது சுயமரியாதை மகாநாட்டில் திருமிகு மரகதவல்லியார் சுயமரியாதைக் கொடியை ஏற்றும்போது நிகழ்த்திய சொற்பெருக்கு வருமாறு:—

அன்பார்ந்த சகோதரர்களே!

அருமைச் சகோதரிகளே!

இன்று இங்கு கூடும் நமது சுயமரியாதை மகாநாட்டின் முதல் நிகழ்ச்சியாக இக்கொடியேற்ற நிகழ்ச்சி நடைபெறுகிறது. இப்பணியை ஆற்றுமாறு குறிப்பிட்டிருந்த ஆசிரியர் கண்ணப்பர் வரமுடியவில்லை எனினும், பெரியார் பலர் இங்கு வந்திருக்கின்றனர். அப்படியிருந்தும் ஆண்டிலும், அறிவிலும் சிறியேனாகிய எனக்கு இப்பணியை நீங்கள் அளித்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

தமிழ் நாட்டிற்கு நமது சுயமரியாதை இயக்கம் எவ்வளவு அவசியமென்பதை இவ்வியக்கம் நாள்தோறும் வளர்ந்து வருவதிலிருந்து நன்கறியலாம். வறண்ட நிலத்திலுள்ள மக்கள் வான் மழையை வரவேற்பது போன்று இவ்வியக்கத்தை நாட்டின் பல பகுதிகளிலும் வரவேற்கின்றனர்.

ஜாதிக் கட்டுப்பாடு, சமயக் கட்டுப்பாடு, சாஸ்திரக் கட்டுப்பாடு ஆகிய பலவிதக் கட்டுப்பாடுகளால் நமது மக்களின் அறிவும், அவயவங்களும் கட்டுப்படுத்தி ஒடுக்கப்பட்டுவிட்டன. ஜாதி பேதம் எல்லையற்று வளர்ந்து பெருங் கொடுமைகட்கு மக்களை உட்படுத்திவிட்டது. ஜாதி பேதத்தால் விளைந்த நன்மை எதுவுமில்லை. அதனால் பொருட் செலவும், வீண் கஷ்டமும், பகையுமே வளர்ந்து வருகின்றன. நாள்தோறும் வளர்ந்துவரும் பொருளற்ற சடங்குகள் மக்களின் இன்ப நெறியை அழித்துத் துன்பத்தை வளர்த்து வருவதை எவரே அறியாதவர்? சமயத்தின் பெயரால் மூட வழக்கங்கள் எண்ணற்று மலிந்துவிட்டன. கண்ணுக்குப் புலனாகாத பரலோக வாழ்வில் மக்கள் மனம் இழுக்கப்பட்டதன் பயனாக இவ்வுலகவாழ்வில் அர்த்தமில்லாத சலிப்பேற்பட்டு நாடு பாழடைந்து வருகின்றது. விதியின்படி எல்லாம் நடக்கும் என்ற சோம்பேறிப் பேச்சு மலிந்ததன் பயனாக அறிவு வளர்ச்சியும் தொழில் முயற்சியும் செல்வப் பெருக்கும் குன்றிவிட்டன. தாங்கள் செய்யும் எவ்விதமான தப்பிதத்தையும் கோவில் விக்கிரகங்களை வணங்குவதாலும் பார்ப்பனர் செய்யும் பரிகாரத்தாலும் நீக்கிக்கொள்ளலாமென்ற எண்ணம் மேலோங்கி மக்களின் ஒழுக்கம் சிதைவுற்றுவிட்டது. இம்மாதிரியான பிறழ்ந்த உணர்வு போய்விடவேண்டும்.

நல்வாழ்வு வாழும் எந்த நாட்டிலும் பெண்மக்கள் உரிமையும் பெருமையும் பெற்றிருக்கின்றனர். நமது நாடு எவ்வளவு தூரம் கீழிறங்கி வருகிறதோ அவ்வளவு தூரம் பெண்மக்கள் அடிமைப்படுத்தப் பட்டிருக்கின்றனரென்பதை உணரவேண்டும். நகைகளும் பட்டாடைகளும் பெண்மக்களுக்கு அணிவித்தாலும் அவர்களைத் தங்களுடைய போகப் பொருளாகத்தான் ஆண்மக்கள் கருதுகின்றனர். அப்படியே ஏடுகளும் நவில்கின்றன. இந்து மதச் சட்டமும் அப்படியே பேசுகின்றது. இந்நிலைமையை மாற்ற முயலுதல் வேண்டும். ஆணும் பெண்ணும் சரிநிகர் சமானமாக இந்த நாட்டில் வாழ வழி யேற்படுகிறவரை சரியான உருவுள்ள எந்தத் தோற்றத்தையும் எதிர்பார்க்கமுடியாது.

தேசம் பல வகையினும் சிதைவுற்று வருகிறது. அதனைச் சீர்படுத்துதற்குப் பலவித வளர்ச்சியும் முயற்சியும் தேவையாக இருக்கின்றன; ஆனால் அவற்றுள் எவை முக்கியமாகும்—எவை முன்னதாகக் கைக்கொள்ளப் படவேண்டும் என்பதைக் கூர்ந்து நோக்குதல் நமது கடமையன்றோ? தேசமக்கட்குக் கிடைக்கும் வசதி மிகக் குறைவாக இருக்கிறது. அச் சிறு வசதியும் சில ஜாதியினருக்கு ஏகபோக உரிமையாகவும், சில ஜாதியினருக்கு அடியோடு இல்லாமலும் செய்யப்பட்டிருப்பது கொடுமையாகும். இருபாலாரும் பெறத்தகுந்த சில வசதிகள் ஆண் மக்களுக்குமட்டும் இருப்பதும், பெண்மக்கட்கு இல்லாமற்போவதும் அநியாயமாகும். ஜாதி பேதம் ஒழிந்து யாவருக்கும் ஒரே உரிமை நாட்டில் ஏற்படவேண்டும். ஆணும் பெண்ணும் சமானமாக வாழவேண்டும். இவையே இன்றைத் தமிழ் நாட்டில் காணவேண்டிய வேலைகள் என்று நான் கருதுகிறேன். இவ் விரு கொள்கைகளும் நமது சுயமரியாதை இயக்கத்தின் அடிப்படையான தத்துவங்களாக இருப்பது எனக்கு மகிழ்ச்சியைத் தருகின்றது. பழைய வழக்கங்கள் சிறந்தன என்ற பிழையான நினைப்பை அடியோடு கைவிடவேண்டும். பழமையாயினும் புதியதாயினும் எதில் நன்மையும் நியாயமும் இருக்கின்றனவோ அதனைக் கொஞ்சமும் பின்வாங்காமல் கைக்கொள்ளவேண்டும். ஏனைய நாடுகளையும் நோக்கி நாம் வாழ வழிபார்க்க வேண்டும்.

மக்கள் வாழ்வுக்கு வெற்றி யளிக்கும் அருங் கொள்கைகளைக் கொண்ட நமது சுயமரியாதை இயக்கம் உலகமெங்கும் பரந்து ஒளி செய்யவேண்டுமென்று இக்கொடியை உயர்த்துகிறேன்.

——



## மகாநாட்டுத் தலைவர் சொற்பெருக்கு.

ஜூலை-மீ ௨௦, ௨௧-உகளில் திருநெல்வேலியில் நடைபெற்ற திருநெல்வேலி ஜில்லா ௨-வது சுயமரியாதை மகாநாட்டில் தலைமை வகித்த திரு. எஸ். ராமச்சந்திரன் பி. ஏ பி எல். அவர்கள் நிகழ்த்திய சொற்பெருக்கு வருமாறு:—

வரவேற்புக்கழகத் தலைவர் அவர்களே, சகோதரிகளே, சகோதரர்களே!

சுயமரியாதைத் தொண்டர்களுக்குள் உயர்ந்தவர்களும் இல்லை, தாழ்ந்தவர்களும் இல்லை என்ற அடிப்படையான கொள்கையைச் செய்கையில் மக்களுக்குக் காட்டுவதற்காகச் சுயமரியாதைத் தொண்டர்களில் ஒருவனை என்னை இம்மகாநாட்டுக்குத் தலைமை வகிக்கும்படி தேர்ந்தெடுத்தீர்களென்று நம்புகிறேன். இம்மகாநாட்டை ஒழுங்காகவும், நேர்மையுடனும் நடத்திவைக்க இங்கு கூடியிருக்கும் அன்பர்கள் ஒத்து உழைப்பார்களென்று எண்ணி என் தலைமைப் பிரசங்கத்தை ஆரம்பிக்கிறேன்.

நூற்றுக்கணக்காகவும், ஆயிரக்கணக்காகவும் ஜனங்கள் ஒன்று கூடி ஒருமைப்பட்டு மனத்தைச்செலுத்த முடிந்தால், ஒரே கொள்கையை நினைக்கவல்லவர்களானால், எக்காரியத்தையும், திறமையாகச்செய்து விடலாமென்பதில் ஐயமில்லை. ஜனங்கள் ஒன்று சேர்ந்து, கண்களும், காதுகளும் ஒன்றுகூடினால் உடனே இருதயம் ஒன்று கூட, தற்சமயம் அநேகமாக வாய்த்துவருகிறது. தெரிந்தோ, தெரியாமலோ உணர்ச்சிகளும் எண்ணங்களும் கலந்து கூடுகின்றன. ஜனங்கள் ஒரே உணர்ச்சி உள்ளவர்களாகவும் ஒரே மாதிரி எண்ணங்கள் உடையவர்களாகவும் ஒரேவித நோக்கமுடையவர்களாகவும், நினைத்தவை பெறுவதற்கு ஒரேவித சக்திவாய்ந்தவர்களாகவும் ஆகிவிடுகிறார்கள். அப்பொழுது சகோதர உணர்ச்சியும் ஒற்றுமையும் உற்பத்தியாகிவிடுகின்றது. இவைகளே மகாநாடுகளிலிருந்து எதிர்பார்க்கப்படும் பயன்களாகும்.

இம்மகாநாட்டில் நூற்றுக்கணக்கான மக்கள் கூடியிருக்கிறார்கள் பெருந்தலைவர்கள் வந்து இம்மகாநாட்டில் கலந்துகொண்டிருக்கிறார்கள் இவ்வளவு மக்களும், இவ்வளவு பெருந்தலைவர்களும் இம்மகாநாட்டில் கலந்துகொள்ளுவதற்கும், இம்மகாநாடு கூடியிருப்பதற்கும் காரணம் என்னவென்று நாம் ஆராயவேண்டும். பொதுமக்களை ஏமாற்றிவிடுவதற்காக "வானத்தை வில்லாக வளைப்பேன்" "மணலைக் கயிறாகத் திரிப்பேன்" என்று வாய்ப்பறை சாற்றுவதற்காக இம்மகாநாடு கூட்டப்படவில்லை. இம்மகாநாட்டின் நோக்கம் இந்நாட்டிலுள்ள அசுத்தமான சாக்கடைகளை எல்லாம் ஒழித்து பிறநாடுகளில் மக்கள் அடைந்திருக்கும் பாத்தியங்களை இந்நாட்டிலும் மக்கள் அடையவேண்டுமென்பதும் இந்நாட்டைச் சுயமரியாதையுள்ள நாடாக்க வேண்டுமென்பதுமேயாகும். இந்நாட்டிலுள்ள வெறுக்கத்தக்க சாக்கடைகள் எவை? நம்மவர்கள் எப்படி இச்சாக்கடைகளால் துயருகிறார்கள். இந்நாட்டிலுள்ள சாக்கடைகள் மதப் புரட்டுகள், புரோகிதப் புரட்டுகள், ஜாதிப் புரட்டுகள், வேதப் புரட்டுகள், புராணப் புரட்டுகள் பிறப்பால் உயர்வுதாழ்வுப் புரட்டுகள், பழக்கவழக்க புரட்டுகள் இன்னும் அநேக சாக்கடைகளாலும் இப்பொழும் சாக்கடைகளின் நாற்றத்தாலும் நம்மவர்கள் சுயமரியாதை யற்று மிருகங்களினும் கேவலமாய் வாழவேண்டியவர்களாயிருக்கிறார்கள். ௧௯௧௪-ஆம் வருஷத்தில் ஆரம்பித்த ஐரோப்பிய மகாயுத்தத்திற்குப் பிறகு உலகத்திலுள்ள அநேகமாய் எல்லா தேசங்களிலும் சுயமரியாதை இயக்கம் தலையெடுத்துப் பரவ ஆரம்பித்திருக்கிறது. இப்புதிய இயக்கத்தின் தத்துவங்களைப்பற்றி சிலவார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன், சுயமரியாதை என்னும் பதம் சாதாரணமாக எளிதில் விளங்கக் கூடியதாயிருக்கிறது. ஒரு மனிதனோ அல்லது ஒரு சமூகமோ அல்லது ஒரு தேசமோ இயற்கையிலேயே எவ்வித கட்டுப்பாடும் தடையுமின்றி முன்னேறுவதற்கு ஏதுவான எல்லா சந்தர்ப்பங்களும், பாத்தியங்களும் அந்த மனிதனுக்கும், சமூகத்திற்கும் தேசத்திற்கும் உண்டு என்பதை சுயமரியாதை இயக்கம் ஒப்புக்கொள்ளுகிறது. மனிதனுடைய மனவளர்ச்சி, அறிவுவளர்ச்சி, ஆண்மை வளர்ச்சி இவைகள் குன்றுவதற்கு ஏதுவாயிருக்கும் துர்நாற்றமுள்ள சாக்கடைகள் அனைத்தையும் தூர்க்க இவ்வியக்கம் முன் வந்திருக்கிறது. சுயநலமே மூல மந்திரமாகக் கையாண்டு வரும் ஒரு தனிப்பட்ட வகுப்பார் தங்கள் கையில் எல்லா பாத்தியங்களையும், அதிகாரங்களையும் வைத்துக்கொண்டு மற்றவர்கள் மீது ஆதிக்கம் செலுத்தத் தலைப்பட்டால் அதற்கு விரோதமாக எதிர்த்துக் கிளர்ச்சி செய்து சண்டைபோட ஒவ்வொரு மனிதனுக்கும் பிறப்பு உரிமை உண்டு என்றும் ஜனசமூக சம்பந்தமாக யாதொரு கட்டுப்பாட்டுக்கும் கீழ்ப்படியாது சுயேச்சையாக நினைக்கவும், அதன்படி பேசவும், அதன்படி நடக்கவும், ஒவ்வொருவருக்கும் பிறப்பு உரிமை உண்டு என்றும் சுயமரியாதை இயக்கம் பறையடிக்கிறது. இயற்கைச் சட்டத்தைப்போல் பிறப்பு உரிமைச் சட்டங்கள் அடங்கிய கொள்கைகளை முன்பின் யோசனையின்றிப் பின்பற்ற வேண்டுமென்றும், முன்னேற்றம் அடையத்தக்க ஒழுங்கான திட்டங்களைத் தயாரித்து தற்கால மனுஷ வாழ்க்கையைச் சீர்திருத்த வேணுமென்று மன உறுதியுடன் மக்களுடைய பலத்தை எல்லாம் ஒன்று திரட்டி, ஒருமுகப்படுத்தி, ஒரே கட்டுப்பாடாக நின்று சமூகக் கொடுமைகளை எல்லாம் கூடியவிரைவில் உடைத்து எறிவதே மக்களின் அடுத்த வேலையென்றும் இவ்வியக்கம் வற்புறுத்துகின்றது. சுயமரியாதை என்ன அருமையான பொருள். இவ்வுலகிலுள்ள மனிதன் என்று சொல்லப்படும் ஒவ்வொருவனுக்கும் இன்றியமையாத அழகிய பொருளாகும். சுயமரியாதை இன்னதென்று அறியாத ஒருவன் தன்னைச் சுதந்திரமுள்ள ஒரு மனிதனென்று எண்ண இடமில்லாமல், பேடி என்றே அழைக்கப் படுவான்.

நமது அனுபவத்தில் சுயமரியாதை இயக்கத்தைப் போன்று பொதுமக்களின் மனத்தைக்கவர்ந்து நின்று அவர்களுக்கு நன்னம்பிக்கையைப் புகட்டி அவர்கள் அபிமானத்தை முற்றிலும் கவர்ந்து விளங்கிய வேறு எந்த இயக்கமேனும் தென் இந்தியாவில் இருந்திருப்பதாக நமக்குத் தெரியவில்லை. சில ஆண்டுகளாக இவ்வியக்கத்தின் பயனாக பொது ஜனங்களுக்கு அரசியல் வாதத்தில் இருந்த நம்பிக்கை முற்றிலும் போய்விட்டது. இப்பொழுது தேசத்துக்கு உண்மையான விடுதலை சமூக முன்னேற்றத்திலிருந்தும் சமுதாய சீர்திருத்தத்திலி







ருந்துதான் கிடைக்குமேயொழிய அரசியல் பூச்சாண்டிகள் மூலம் கிடைக்கமாட்டாதென்று பொது ஜனங்கள் இவ்வியக்கத்தின் பலனாகக் கருதுகிறார்கள். இத்தகைய சமூக முன்னேற்ற உணர்ச்சி ஆதியிலிருந்து அரசியல் வாதிகளின் மனத்தில் பதிந்து தோன்றியது. ஆனதுபற்றியே ராஜாராம் மோகன்ராய் கேசப் சந்திரசென், ஜஸ்டிஸ் ரானடே, முதலிய இந்தியப் பெருந்தலைவர்கள் சுயராஜ்ஜியம் என்ற சுயநலமான கூக்குரலில் தங்கள் ஊக்கத்தையும் முயற்சியையும் செலவிடாமல் சமூக முன்னேற்றத்திலேயே தங்களுடைய ஊக்கத்தையும் முயற்சிகளையும் ஜீவியகாலம்வரை செலவு செய்தார்கள்.

சமூக சீர்திருத்தமும், சமூக மேம்பாடும் இல்லாமல் நம் தேசம் எக்காலத்திலுமே விடுதலை பெறுதென்ற தீர்மானத்திற்கு வந்தபின்தான் காலஞ்சென்ற நம் தலைவர்களான டாக்டர் T. M நாயர் அவர்களும் சர்பி.டி. தியாகராயரவர்களும் பார்ப்பனரல்லாதார் இயக்கத்தை ஆரம்பித்தார்கள். நம் சமூகமானது ஒருமித்த நோக்கம் படைத்த பற்பலவகுப்புகளாகப் பிளவுபட்டு ஒருவருக்கொருவர் உயர்வென்றும் தாழ்வென்றும் பாராட்டி வரும்வரையில் இந்தியாவில் சுயராஜ்ஜியமென்பது ஓர் கனவாகவேயாகும் என்று நம் தலைவர்கள் போதித்தார்கள். நாமெல்லோரும் ஒரே தேசத்தவர்கள் என்ற சமரசம் வாய்ந்த பரந்த தேசிய உணர்ச்சியற்றவர்களின் ஆட்சி முறையினால் எக்காலத்திலும் நம் தேசத்திற்கு நன்மை ஏற்படாதென்றும் போதித்தார்கள், நலம்பெறத்தக்க ஆட்சி முறையை அடையவேணுமானால் நம் சமூகவாழ்வில் எல்லாத் துறைகளிலுமே உயர்வு தாழ்வென்ற கற்பனை அடியோடு அழியவேண்டியது அவசியமாகும். பிராமணரல்லாதாரியக்கம் ஆரம்பத்தில் சமுதாய முன்னேற்றத்தை அடிப்படையாகக்கொண்டிருந்தது.

ஆனால் அரசியல் பேய் ஜாஸ்தியாகப் பிடித்து இருந்த பிராமணரல்லாதார்களும் அவ்வியக்கத்தில் இருந்தபடியால் சமுதாய சீர்திருத்தம் என்பது முக்கியமான வேலையென்று கருதாது அரசியல் சீர்திருத்தத்தையும் அதன் பலனாக உத்தியோகங்களைக் கைப்பற்றுவதையும் முக்கியமாகக் கருதிப் பிராமணரல்லாதாரியக்கத்தின் நோக்கத்தை சற்று மாற்றிவிட்டார்கள். இந் நிலைமையில்தான் திரு ஈ. வெ. ராமசாமி அவர்கள் ஆழ்த்தப்பட்டதும் ஒடுக்கப்பட்டதுமான எல்லா சமூகங்களும் விழித்து, உணர்ந்து தங்கள் தங்கள்உரிமைகளை சமமாகப் பெறுவதற்காக முன் வரும்படி முரசறைந்தார்கள். இப்பேரொலியை ஆக்ஞையாகக் கருதி இருபதாவது நூற்றாண்டு பௌத்தராகிய திரு ஈ. வெ. ராமசாமி அவர்கள் கூறிய வீரமொழிகளை நாமதியாது பின்பற்றுவாராயினர். சீர்திருத்தம் என்பதில் யாதொரு பயனுமில்லை என்று முதல் முதல் கண்டுபிடித்தவர் நமது பௌத்தர். சீர்திருத்தம் என்பது மன பலமில்லாதவர்களின் ஆயுதமென்றும், அவர்களின் மனதைப்போலவே அவர்கள் ஆயுதமும் பலமற்றதென்றும் தீயசெய்கைகளையும் மூடப் பழக்க வழக்கங்களையும் அறவே ஒழிப்பதுதான் நியாயமென்றும் திருத்த நினைப்பது பிரயோஜனமற்றதென்றும் முடிவுக்கு வந்தவர் நமது பௌத்தர். சமூகத் தீமைகளை அகற்றுவதற்கு முதல் முதலாக உயர்வு தாழ்வு தொலையவேண்டுமென்றும், உயர்வு தாழ்வென்ற மன நிலைமை உள்ளவரையில் சுயமரியாதை உணர்ச்சியில்லாதவரையில் ஒரு வகுப்பு மற்றொருவகுப்பை ஆழ்த்தியே வைத்திருக்குமென்றும் கண்டுகொண்ட தீர்க்கதரிசி நமது பௌத்தர். எந்தக்காலத்தில் பிறப்பால் உயர்வுதாழ்வு இல்லையெனக் காணப்பட்டதோ, எந்தக்காலத்தில் எல்லா ஜனங்களுக்கும், தாங்கள் தாங்கள் முன்னேற்றம் அடைவதற்கு சம சந்தர்ப்பமும் சம உரிமைகளும் தேவையென மதிக்கப்பட்டதோ, எந்தக்காலத்தில் இருவகை நோக்கங்கள் ஈடேறப்பட்டதோ அந்தக் காலத்திலேதான் எல்லா நன்மைகளும் தாமாகவே மக்களுக்கு விளையுமென பூர்ண நம்பிக்கையுள்ளவர் நமது பௌத்தர். "சுயமரியாதையுடன் இரு; எக்காரணம் பற்றியும் உன்னிலும் ஒருவர் உயர்வுடையவர் என மதித்து அடிமைப்படாமலிரு. எக்காரணம் பற்றியும் உன்னிலும் ஒருவர் தாழ்வுடையவரென மதித்து அடிமைப்படுத்தாமலிரு" என்பதுவே திரு ஈ. வெ. ராமசாமி அவர்களின் அமுத வாக்கியங்களாகும்.

## மகாநாட்டுத் தலைவர் சொற்பெருக்கு.

இச்சுயமரியாதை இயக்கம் மாகாணமெங்கும் காட்டுத் தீபோல் பரவிவருகின்றது. மாகாணத்தில் உள்ள தலைவர்கள் பலரும், பல மேடையில் கூடிப் பேசப்புகுந்துவிட்டார்கள். ஒரே தந்தைக்கு உற்பத்தியான சகோதரர்கள் போன்று மக்கள் எல்லோரும் பேதமற்று வாழ்வதற்கு சகலரும் முயற்சி செய்ய வேண்டியது எல்லாருடைய கடமையாகும் எனவும் கூறுகிறேன். இந்நோக்கம் பற்றி அரசியல் வாதத்தில் செலவிடும் ஊக்கத்தில் ஒரு சிறிய பாகத்தை சமூகத்துறையில் செலவிட்டால் நமக்கும் சுயாக்ஷிக்கும் வெகுதூரமாய் இராதென்பது பலரின் துணிபு சமரசமின்றி சமத்துவமின்றி சுயாக்ஷியை விரும்புவது வீண் கனவாகும். சுயமரியாதை இயக்கமானது உலக இயக்கத்தைச்சேர்ந்தது. ஒவ்வொரு தேசமும் எல்லாத் துறைகளிலும் சுயமரியாதை இயக்கத்தின் பலனாக விரைவாக முன்னேறிக் கொண்டேயிருக்கும்பொழுது நாம் மாத்திரம் எவ்வளவு காலம் நொண்டிக் கழுதையைப் போல் சென்று கொண்டிருப்பது. நாமும் உலகப் பந்தய ஓட்டத்தில் விரைவாகச் செல்ல சுயமரியாதை இயக்கம் தோன்றி இருக்கிறது. கீழ்நாட்டில், ஜப்பான், சைனா, இந்தியா, டர்க்கி, ஆப்கன்ஸ்தான், முதலிய தேசங்கள் சுயமரியாதை இயக்கத்தின் சுழலில் சிக்கிக்கொண்டு அதனால் கிடைக்கும் பயன்களை அனுபவிக்க ஆரம்பித்திருக்கின்றன. மேல்நாடான ஐரோப்பா கண்டத்தில் முக்கியமான இங்கிலாந்து, பிரான்ஸ், இட்டாலி, ஜெர்மனி முதலிய தேசங்களும், ஆப்ரிக்காவில் ஈஜிப்ட், தென் ஆப்ரிக்கா முதலிய தேசங்களும், அமெரிக்காவில் கனடா, யுனைடெட்ஸ்டேட் என்ற தேசங்களும் சுயமரியாதை என்னும் சுழலில் கிரமமாக அகப்பட்டு அதன் பலன்களை சமுதாயத்துறையிலும் அரசியல் துறையிலும், பொருளியல் துறையிலும் அனுபவித்துக் கொண்டுவருவதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். இந்த இயக்கம் உலகத்தில் உள்ள தேசங்களையும், அதிலுள்ள மக்களையும் பலதுறைகளிலும் முன்னேற்றமடையச் செய்து விடுமென்பதில் எல்லாருக்கும் நம்பிக்கை யிருக்கிறது. ஆனால் உலகத்திலுள்ள தேசங்களெல்லாம், தனித் தனியாக முன்னேற்ற மடைந்தபின் உலகம் எந்த நிலைமையில் இருக்கும் என்பதை ஆராய்வது சோம்பேறியின் வேலையாகமாட்டாது. சென்ற ஒரு நூற்றாண்டில் உலகத்து தேசங்கள் அடைந்திருக்கும் முன்னேற்றமானது அதற்கு முந்திய எல்லா நூற்றாண்டுகளிலும் உலகத்து தேசங்கள் அடைந்த முன்னேற்றத்தைப்பார்க்கிலும் ஜாஸ்தியென்றும் ௧௯00-ஆம் முதல் ௨000 வருஷமுடிய உலகத்து தேசங்கள் அடைந்திருக்கிறதும், அடையப் போவதுமான முன்னேற்றமானது நாகரிகம் தோன்றிய காலம் முதல் ௧௯00-ஆம் வரையில் உலகத்திலுள்ள தேசங்களெல்லாம் அடைந்திருக்கிற முன்னேற்றத்தைப் பார்க்கிலும் ௪000 மடங்கு ஜாஸ்தியாக யிருக்கு மென்றும் உலக சரித்திர ஆராய்ச்சியுள்ள ஒவ்வொருவர்களும் சொல்லுகிறார்கள். இப்பொழுது உலகத்திலுள்ள முக்கியமான பத்து மதங்களான, இந்து மதம், பௌத்தமதம், மகமதிய மதம், கிறிஸ்து மதம், கன்பியூஷஸ் மதம், டாவ் மதம், ஜூடே மதம், ஷிண்டு மதம், சிக்கு மதம், பார்சிமதம் இவைகளில் ஆரம்பக் கொள்கைகளில் சிலதும், ஆரம்பக் கொள்கைகளை மறைத்து வைத்திருந்த மூடப் பழக்க வழக்கங்களில் பெரிதும் சுயமரியாதைக் கொள்கைகளின் பலனாய்த் தவிடு பொடி யாகிக் கொண்டு வருகின்றன. மனுஷவர்க்கம் ஒன்று சேர்வதை இந்த மதங்கள் தடைசெய்ய முடியாது. இப்பொழுது மனுஷ வர்க்கமானது ௫00 தேசத்தினர்களாக வாழ்ந்து வருகிறார்கள். மேல்காட்டிய மதங்களிலும், முக்கியமான கொள்கைகள் அநேகமாய் ஒரே விதமாகத் தானிருக்கிறது. உலகத்திலுள்ள தேசங்கள் ஐக்கியமாய் ஒன்றுபடுவதற்கு மேற்காட்டிய பத்து மதங்களும் தடையாக மாட்டா. சென்ற ௫0 வருஷத்திற்குள் உலகத்தில் பதிப்பிக்கப் பட்ட புத்தகங்களும், பத்திரிகைகளும், அதற்கு முன் உலகத்தில் பதிப்பிக்கப் பட்ட எல்லாப் புத்தகங்களையும், பத்திரிக்கைகளையும் விட ஜாஸ்தியென்றும் உலக முற்போக்கின் வேகத்தை ஒருவாறு அறிந்து கொள்ளலாம். உலக சரித்திரத்தில் இதற்கு முந்திய எல்லா நூற்றாண்டுகளிலும், மனுஷவர்க்கம் ஒவ்வொரு அறிவுத் துறைகளிலும் கண்டு பிடித்திருக்கும் விஷயங்களைப் பார்க்கிலும் அதிகமாக சென்ற நூற்றாண்டில் கண்டு பிடித்திருக்கிறார்கள் என்றால் உலக முற்போக்கின் வேகம் இன்னும் தெளிவாகத் தெரியும். உலகத்தில் வழங்கும் சுயமரியாதை இயக்கத்தின் பலனாக கி. பி. ௨000ஆம் வாக்கில் உலகத்திலுள்ள தேசங்களுக்கெல்லாம் சேர்ந்து ஒரே மதமும், ஒரே பாஷையும், ஒரே அரசியலும், வழங்கு மென்று உலக சரித்திர நிபுணர்களால் எதிர்பார்க்கப் படுகிறது. மேலும் அடியில் விவரித்திருக்கிறபடி கி. பி. ௨000ஆம் வாக்கில் உலகம் நடைபெறு மென்று எதிர் பார்க்கப் படுகிறது.

௧. உலகத்தில் ஒவ்வோரிடத்திலும் ஆகாய விமானங்கள் பறந்த வண்ணமாயிருக்கும். பொதுவாக எல்லோராலும் உபயோகப்படும். இவைகளில் ஏறிச்சென்று உலகத்தை ஒருவாரத்தில் சுற்றி விடலாம்.

௨. வலைபோல் பரப்பப்பட்ட இருப்புப் பாதைகளும், ரதங்களும் கம்பியில்லாத் தந்திகளும், இனிமேல் கண்டு பிடிக்கப் படுகிற யந்திர வசதிகளும் உலகமுழுவதிலும் நிறைந்திருந்து மக்களைச் சமீபத்தில் கொண்டுவந்து ஒன்றுபடுத்திச் சகோதரர்களாக ஆக்கிவிடும்.

௩. அநாகரீகமான மனுஷவர்க்கங்களுக்கு ஆதரவளித்து அவர்களை நாகரீக வழிகளில் முன்னேறும்படி செய்து சமத்துவம் பெற ஏற்பாடுகள் செய்யப்படும்.

௪. உலகத்திலுள்ள ஆண் பெண்கள் எல்லாரும் படித்தவர்களாக யிருப்பார்கள்.

௫. உலகத்தில் எல்லாபாஷைகளிலுமுள்ள வார்த்தைகளும், தத்துவங்களும் சேர்ந்த ஒரு பொதுபாஷை உலகத்தில் பேசப்படும்.

௬. எல்லாருக்கும் பொருத்தமான மதம் என்ற ஒரு தத்துவம் உலகத்தில் வழங்கும்.

௭. உலகத்திலுள்ள ஆண் பெண் எல்லாருக்கும் தேர்தல் உரிமை ஏற்பட்டிருக்கும்.

௮. பெண்களின் உரிமைகள் முழுதும் அங்கீகரிக்கப்பட்டுப் பெண்களுக்குச் சமத்துவம் ஏற்பட்டிருக்கும்.

௯. உலகத்திலுள்ள நிலங்களெல்லாம் உலகத்திலுள்ள எல்லாருடைய சொத்தாகும்.

௧0. கடல்களும் அவைகளின் அந்தங்களும் சொந்தச்சொத்து என்ற பாத்தியமும் உலக முழுவதிலும் அங்கீகரிக்கப்படும்.

௧௧. கூட்டுறவு ஞானமாக உலகத்தில் பரவியிருக்கும் இப்பொழுது இருப்பதைப் பார்க்கிலும் உலகத்தில் சொத்தானது சமமாக மக்களால் அனுபவிக்கப்பட்டுவரும்.

௧௨. சாஸ்திரப்படியுள்ள வேளாண்மை உலகத்தில் ஞானமாய் இக்காலத்தைப் பார்க்கிலும் ௪ மடங்கு தானியங்கள் ஞானமாக உண்டாக்கப்படும்.

௧௩. மதசம்பந்தமாக விடப்படும் விடுமுறை நாள்களெல்லாம் இல்லாமல் ஒழிந்து எல்லாருக்கும் பொருத்தமான சில நாள்கள் விடுமுறை நாட்களாக ஏற்றுக்கொள்ளப் படும்.

௧௪. ஆண் பெண் இவர்களில் சோம்பேறிகள் ஒருவரும் உலகத்தில் இருக்கமாட்டார்கள். அப்படியிருந்தால் அவர்களை அவர்கள் சிநேகிதர்களும் ஐக்கிய அரசாங்கத்தாரும் வேலை செய்யும்படி செய்வார்கள். ஒவ்வொருவருக்கும் சரியான ஆகாரமும், உடுக்க உடையும் இலேசாகக் கிடைக்கும்.

௧௫. உண்பது, குடிப்பது, உடைதரிப்பது, விளையாடுவது, பொருள் சம்பாதிப்பது இவைகள் தான் ஜீவகாலத்து முழு நோக்கமென்று மனிதர்கள் நினைக்கமாட்டார்கள். இதற்கு மேலான உண்மையைத் தெரிந்து கொள்ளப் பாடுபடுதல் மக்களின் முக்கியமான வேலையென்றும் அதை ஆராய்ந்து விசாரணைசெய்து அதைப்பற்றிப் படித்து விளைந்தவருவதுதான் மனிதனுடைய முதற் கடமையென்றும் ஒவ்வொரு மனிதனும் உணர்ந்து அதை மற்றவர்களுக்கும் போதிப்பான்.

௧௬. கிரிமினல் குற்றங்கள் ஒன்றுக்கும் பாதிக்குமேலாகக் குறைந்து போய்விடும். குடியானது உலகத்தைவிட்டுப் பறந்து போகும். மனுஷவர்க்கத்தின் சீக்கும் அதனால் ஏற்படும் வருத்தங்களும் பாதிக்கு மேல் குறைந்து போய்விடும். மனுஷவர்க்கத்தின் ஜீவகாலம் இரட்டித்துவிடும். சிக்காளிகளும், முடவர்களும், வயதாளிகளும், அன்புடன் போற்றப்படுவதோடு மக்களுக்குள் ஞானமான அன்பும், நட்பும் சந்தோஷமும் நிறைந்திருக்கும்.

௧௭. அரசியலிலும், மதத்திலும், பாஷையிலும், உலகத்திலுள்ள தேசங்கள் எல்லாம் ஒரு ஐக்கிய நாடாக ஏற்பட்டுவிடும்.

௧௮ இவ்வளவு காலம் ஏன் நாம் முட்டாளாக யிருந்தோம் என்று ஒவ்வொருவரும் ஆச்சரியப்படுவார்கள்.

சகோதரர்களே! நான் சுருக்கிச்சொல்லலாம் என்று ஆரம்பித்த விஷயமானது சிறிது பெருகிவிட்டதென நினைக்கிறேன். ஆனால் தீண்டாமையைப்பற்றி சில வார்த்தைகள் சொல்லாமலிருக்க முடியவில்லை. மதக்கோட்பாடுகளால் வியாதிகள் பீடிக்கப்பட்டு அதன்மூலம் தீண்டாமை என்பது நம் நாட்டுக்கு ஆரியர்களால் கொண்டுவரப்பட்டது என்பதை நான் ஒத்துக்கொள்கிறேன். ஆனால் இப்பொழுது ஆரியர்களிடத்தில் எவ்வளவு பலமாய் தீண்டாமை என்பது வேரூன்றி யிருக்கிறதோ அவ்வளவு பலமாய்ப் பிராமணரல்லாதார்களிடத்திலும், வேரூன்றியிருக்கிறதென்று தெரிவிக்க நான் வருந்துகிறேன். மதக்கொள்கையின்பேரால் ஆரம்பிக்கப்பட்ட தீண்டாமையானது பிராமணரல்லாதாரிடத்தில் மதக்கொள்கையைவிட்டுப் பொருளியல் கொள்கைகளை ஆதாரமாகக் கொண்டு தீண்டாமை வளர்ந்துவருகிறது. தீண்டாத ஜாதிக்காரர்களென்று சொல்லப்படுகிறவர்களை முன்னேற்றம் அடையும்படி செய்துவிட்டால் வேலைக்கு ஆட்கள் இல்லாமல் போய்விடுமென்று கருதியே பிராமணரல்லாதாரில் அநேக வகுப்பார் தீண்டாமையைக் கைக்கொண்டு இருக்கிறார்களென்று அனுபவத்தில் தெரிய வருகிறது.

ஆகையால் தீண்டாமையை நம் தேசத்தைவிட்டு விரட்டுவதற்கு மதத்தை சீர்திருத்தினால் மட்டும் போதாது. கோவில் சீர்திருத்தினாலும் மட்டும் போதாது. கோவில் பிரவேசம் செய்வித்தால்மட்டும் போதாது. பொருள், தொழில், எஜமான், வேலைக்காரன் (capital and labour, master and servant) என்ற பொருளியல் சம்பந்தமான கொள்கைகளையும் சீர்திருத்த வேண்டியதாயிருக்கிறது.

சகோதரர்களே, இதுவரை பொறுமையுடனிருந்து என்னுடைய ஒத்துழைத்ததற்கு நன்றிபாராட்டுகிறேன்.

——

### விருந்தில் விடம்.

கோரக்பூர் ஜில்லாவைச் சேர்ந்த பட்டன் என்ற கிராமத்தில் ஒருவர் தமது புத்திரனுடைய மணத்தை முன்னிட்டு சில பார்ப்பனர்களுக்கு விருந்தளித்தா ரென்றும், விருந்து முடிந்ததும் ௯ பார்ப்பனர் உயிர் துறந்தன ரென்றும், உணவில் விஷம் கலந்திருக்கலா மென்று கொண்டு சந்தேகம் கொள்ளுவதாகவும், இதைப் பற்றிப் போலீஸார் தீவிரமாக விசாரணை நடத்தி வருவதாகவும் கல்கத்தாச் செய்தி கூறுகிறது.

——

நாளென் செயும்! வினைதா னென்
செயும்! எனைநாடி வந்த
கோளென் செயும்! கொடுங்கூற்
றென் செயும்! குமரேசரிரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

குமரன், காரைக்குடி.
சுக்கில-௵ ஆடி-மீ ௧௦-உ

# திருநெல்வேலி ஜில்லா மகாநாடுகள்.

சென்ற சனி ஞாயிற்றுக் கிழமைகளில் திருநெல்வேலியில் சுயமரியாதை மகாநாடு, சைவமெய்யன்பர் மகாநாடு, சுயமரியாதைத் தொண்டர் மகாநாடு ஆகிய மூன்றும் நடைபெற்றுள்ளன. வைதீகச் சைவர்கள் மலிந்து வாழும் பகுதிகளுள் திருநெல்வேலி ஜில்லாவும் ஒன்றென்பதை யாவரும் அறிவர். அந்தகான் இம்மாதிரி மகாநாடுகள் கூட்டப்பெறுதல் வேண்டுமென்பது நமது கருத்து. சுயமரியாதை இயக்கம் சைவசமயத்துக்கும் கடவுள் நெறிக்கும் ஆஸ்திகத்திற்கும் கேடுசூழ்கிறதென்று சிலர் கண்மூடிக்கதறுவதைப் பலர் நம்பியிருக்கின்றனர். உண்மையாக அப்படி பொன்றும் சுயமரியாதைக்காரர்களால் முழுகிப் போகுமென்று பயப்படவேண்டியதில்லையென்பதையும் வீண் கஷ்டங்கள் ஒழிந்து இன்பவாழ்வே சுயமரியாதை இயக்கத்திலிருந்து தோன்றப்போகிறதென்பதையும் மக்கட்கெடுத்துக் காட்டவேண்டியது இன்றியமையாததாக இருக்கின்றது. இவ்வுண்மையை உள்ளபடி சிலரே அறிந்திருக்கின்றனர். எதிரிகளின் பொய்யான பிரசாரத்தை யொழித்து அறியாதமக்கட்கு அறிவுறுத்துதல் சுயமரியாதை இயக்கத்தாரின் கடமையாகும். திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள மக்கட்கு இவ்வியக்க தத்துவம் நன்கு விளங்குதல் வேண்டும். பார்ப்பனருடன் எவ்வளவு தூரம் போராடவேண்டியிருக்கிறதோ அதற்கதிகமான போராட்டத்தைச் சைவப் பெரியார்களும் விரும்புகிறார்களென்பதை நாம் எடுத்துக்கூற வேண்டியதில்லை. ஜாதிபேதத்திற்கும் பார்ப்பனக் கொடுமைக்கும் துணைநின்று உதவி புரிபவர் தற்கால சைவக்குழுவின ரென்பதை உணரவேண்டும். இவர்களின் ஆதிக்கம் மிகுந்துள்ள திருநெல்வேலியில் இந்த மூன்று மகாநாடுகளும் கூடியிருப்பது பாராட்டத்தக்கதாகும். மனிதவாழ்விற்கு இடர் செய்யும் வழக்கங்கள் எதையும் உடைத்தெறிய வேண்டுமென்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டே இம்மகாநாடுகள் நடைபெறுகின்றன. சைவ மெய்யன்பர் மகாநாட்டுக்கும் சைவப்பெரியார் தனிக்கூட்டத்துக்கும் உள்ள முக்கியமான வேறுபாடு இதுதான். வாழ்விற்காக மதம் இருக்க வேண்டுமென்பது மெய்யன்பர் கருத்து. மதத்திற்காக மனிதன் துயருற வேண்டுமென்பது பெரியார் கருத்து. இவற்றை அடிப்படையாகக் கொண்டே மற்ற காரியங்கள் நடைபெறுகின்றன.

திருநெல்வேலியில் நடைபெற்ற இம்மகாநாடுகளில் பல அறிவாளிகள், சைவசமயத்தில் உண்மையான பற்றுள்ளவர்கள் பகுத்தறிவுக்கு மதிப்புக்கொடுக்கும் பெரியார்கள் விஜயஞ்செய்திருந்தனர். இம்மகாநாடு திருநெல்வேலி ஜில்லாவில் ஒரு பலமான உணர்ச்சியை உண்டாக்கி விடுமென்பதில் ஐயமில்லை.

பார்ப்பனக் குழுவினரைவிட உயர்வாகவோ சமத்வமாகவோ வரவேண்டுமென்று விரும்பும் சைவப் பெரியார்கள் வீண் பிடிவாதத்தையும் பயத்தையும் விட்டுவிட்டு மக்கள் சமத்வமாக வாழவேண்டுமென்று கருதி அதற்கேற்ப சைவசமயத்தைத் திருத்தியமைக்க முன்வருதல் வேண்டும். முடிந்தமுடிபென்று கோடுகட்டிக் கொண்டு துன்பக்கடலில் கிடந்து தவிக்கும் மக்களிடையில் தத்துவார்த்தம் பேசிப்பெருமைபெற முயல்வது உபயோகமற்ற வேலையாகுமென்பதைத் துணிவாகக் கூற விரும்புகிறோம்.

திருநெல்வேலியிலுள்ள சைவப் பெருமக்களுள் சிறந்த ஆராய்ச்சியுடையவர்களும், உலகியல் நெறியினை அறிந்தவர்களும், காலப்போக்கையும் மக்களின் துயரத்தையும் உணர்ந்தவர்களும் பலருளர். அவர்கள் பிடிவாதங்கொண்ட ஏட்டிடைமைச் சைவர்களைப் பொருட்படுத்திப் பின்னிற்காது மக்கட்கு நல்வழிகாட்ட முன்வருதல் வேண்டும். கற்று உண்மையை உணர்ந்தவர்களும் முன்வரப் பயந்து பின்னிற்பது நாட்டின் துரதிர்ஷ்டவசமேயாகும். சுயமரியாதை இயக்கத்தினை ஆதரிக்கும் சைவ மெய்யன்பர்கள் தனியான சிறு கூட்டங்களை ஆங்காங்கு கூட்டிச் செய்யவேண்டிய வேலைகளைக்குறித்து யோசித்து அடுத்துக்கூடும் மகாநாட்டுக்கு அனுப்புவார்களாயின் பெரும் பயன் விளைதல் கூடும். சைவ அன்பர்கட்கு ஒன்றுகூற விரும்புகிறோம். தங்களைப்போன்ற அபிப்பிராயம் உலகத்திலுள்ள எல்லாருக்கும் வரவேண்டுமென்று விரும்புவது நல்லெண்ணமேயாயினும் அப்படி ஒத்த அபிப்பிராயத்தை எல்லா இடத்திலும் கொண்டிராதவருடன் கூடி யுழைப்பதில்லையென்று பிணங்குவது நியாயமல்லவென்பதை அறிதல் வேண்டும். எல்லாவிஷயத்திலும் ஒருவர் கொள்ளும் அபிப்பிராயத்தையே கொண்டுள்ள வேறொருவரைக் காணமுடியாதென்பது உறுதி. எனவே இம்மாதிரியான எண்ணமுண்டானல் ஒருவரோடொருவர் கூடி ஒன்றுஞ் செய்ய முடியாமலாகிவிடக்கூடும். கூடியவரை ஒத்திருக்கும் அபிப்பிராயத்தை வைத்துக்கொண்டு அதற்காக ஒன்றியுழைத்தல் வேண்டும். இம்மாதிரியான எண்ணத்துடன் சுயமரியாதை இயக்கத்திலோ சைவமெய்யன்பர் குழுவிலோ சேர்ந்துழைப்பதற்கு இடங்கிடைக்குமென்று நாம் கூற வேண்டியதில்லை.

---

# எண்டிசைக் காட்சி.

### ஸர். மு. சித. முத்தையா செட்டியார்.

சென்ற வெள்ளிக்கிழமை காலையில் ஸர். மு. சித. முத்தையா செட்டியாரவர்கள் இவ்வுலகை நீத்தார்களென்ற ஆற்றொணுத் துயரரைக் கேட்டுப் பெரிதும் வருந்துகின்றோம். ஸர். செட்டியாரவர்கள் பிரிவைக் கேட்கும்பொழுது சிறப்பாகச் செட்டிமார் நாட்டு மக்களனைவரும் பொதுவாகச் சென்னை மாகாண வாசிகளனைவரும் மிகவும் துயருறுவர். அன்னுர் சென்னை நகரில் ஒரு திலகமாகத் திகழ்ந்தார். பொதுஜன நன்மையில் பெரிதும் ஈடுபட்டு அறிவாலும் திருவாலும் பெரிதும் உதவிசெய்தனர். வியாபாரஉலகில் மிகவும்பெயர்பெற்று விளங்கலாயினர். சென்னையில் அன்னுரை அங்கத்தினராகவும், தலைவராகவும், உதவியாளராகவும் கொண்டு விளங்கிய பொது நிலையங்கள் பலவாகும். அன்னுர் பிரிவால் அவையனைத்தும் தாயைப் பிரிந்த சேய்போல் தவிக்கின்றன. அன்னுர் இளமையிலிருந்தே புகழொடு தோன்றிப் பொலிந்து புகழொடு பிரிவாராயினர். சென்னை நகரில் அன்னுருக்குத் தக்க ஞாபகச் சின்னம் அமைக்கப் பெறுதல் அவசியமாகும். தந்தையைப் பிரிந்து துன்புறும் மைந்தர் சிதம்பரஞ் செட்டியாரவர்களுக்கும், அன்னுர் சிறிய தந்தையார் ராஜா சர். அண்ணாமலைச் செட்டியார் அவர்களுக்கும் நமது மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவிக்கிறோம்.

### தணிகாசலனர் பிரிந்தார்.

சென்னை திவான்பகதூர் ஓ. தணிகாசலஞ் செட்டியாரவர்கள் சென்ற ஞாயிற்றுக்கிழமை காலையில் உயிர் துறந்தார் என்றறிந்து மிகவும் வருந்துகின்றோம். சமீபத்தில்தான் அன்னுர் சென்னை ஸ்மால்காஸ் கோர்ட்டு பிரதம நீதிபதியாக நியமிக்கப்பெற்றார். அவர் ஜஸ்டிஸ் கட்சியின் பிரதம அங்கத்தினருள் ஒருவராக இருந்து பார்ப்பனரல்லாதார் முன்னேற்றத்தின் பொருட்டுப் பலவகையிலும் தொண்டு புரிந்துவந்தார். சென்னை கார்ப்பொரேஷனிலும், சென்னைச் சட்டசபையிலும், சென்னைக் கல்விக்கழகங்களிலும் அவர் ஆற்றியுள்ள தொண்டுகள் போற்றற்பாலனவாகும். பல ஆண்டுகளாக நந்தமிழ் நன் மக்கள் வாழ்வு குறித்துப் பாடுபட்டு வந்த அன்னுர் பிரிந்தது அனைவருக்கும் பெரு வருத்தந் தருவதாகும். அன்னுர் குடும்பத்தார்க்கு நமது முழு அநுதாபத்தையும் தெரிவிக்கின்றோம்.

---

# உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| தட்ப வெப்ப நிலை:— | ௯௪ டிக்ரி |
| சென்னை உண்டியல் வட்டம் | ௦—௨—௯ |
| சென்னை கடப்பு வட்டி | ௦—௧௧—௯ |
| பவுன் விலை | ௧௩—௮—௩ |
| சிமை வெள்ளிக்கட்டி | ௫௭—௧௦—௦ |
| சீமைக்கட்டித் தங்கம் தோலா ஒன்றுக்கு | ரூ. ௨௧-௧௨-௦ |
| „ பம்பாய்க் கட்டி „ | ௨௧—௪—௦ |
| இம்பீரியல் பாங்கு வட்டி | ஐந்து பெர்ஸண்டு |
| இங்கிலாந்து பாங்கு வட்டி | ஐந்தரைப் பெர்ஸண்டு |

ஆதித்திராவிடர் மகாநாடு:—கழனிவாசலில் நடைபெறப்போகும் இராமநாதபுரம் ஜில்லா ஆதித்திராவிடர் மகாநாட்டில், சிவகங்கை பிளீடரும், தாலுகாபோர்டு வைஸ் பிரஸிடெண்டுமான திரு. யம். பொன்னுசுவாமி பிள்ளை அவர்கள் கொடியேற்று விழா ஆற்றுவார்கள் என ஷை மகாநாட்டுச் செயலாளர் அறிவிக்கிறார். மகாநாட்டை யொட்டி, திருப்புத்தூர் முதலிய பலவிடங்களிலும் பிரசாரஞ் செய்யப்பட்டு வருகிறது.

பாட்மின்டன் பந்தய விளையாட்டு:— காரைக்குடி மினர்வா பாட்மின்டன் கிளப்பில் பிரஸிடென்ஸி டூர்னமென்ற் (டபிள்ஸ்) சமீபத்தில் வெகு விமரிசையாய் நடக்கப்போவதாக ஒரு நிருபர் அறிவிக்கிறார்.

அநுதாபக்கூட்டம்:-நிகழும் ஆடி ௴ 10 உ மாலை 6 மணிக்கு காரைக்குடி ஹிந்து மாதாபிமான சங்கக் கட்டிடத்தில், காலஞ் சென்ற சர் முத்தையா செட்டியாரின் பிரிவு குறித்து ஓர் அநுதாபக் கூட்டம் நடைபெறும். பொதுஜனங்கள் யாவரும் வரக்கோரப்படுகிறார்கள் என்று எஸ். இராமசாமி செட்டியார் தெரிவிக்கிறார்.

---

# தந்திச் செய்தி.

செய்கோன், ஆடி, ௮-உ

| | |
|---|---|
| உண்டியல் விலை | நூற்றிருபத்து மூன்று. |
| சிங்கப்பூர் வட்டம் | இருபத்தாறரை. |

பினங்கு, ஆடி ௯-உ

| | |
|---|---|
| உண்டியல் விலை | நூற்றைம்பத்தைந்து |
| ஈயம் விலை | நூற்றொன்பது. |
| ரப்பர் விலை | நாற்பத்தேழு. |

ரங்கூன், ஆடி ௯-உ.

| | |
|---|---|
| தவணை வட்டி | ௦—௯—௯ |
| புதிய பவுன் | ௧௩—௧௦—௦ |
| பழைய பவுன் | ௧௩—௧௦—௦ |
| படகுநெல் | ௧௪௫ |
| ரயில்நெல் | ௧௪௩ |
| பெரியமில் அரிசி | ௪௧௭—௪௩௮ |
| சிறிய மில் அரிசி | ௪௩௭—௪௩௮ |
| மீடான் அரிசி | ௪௪௨—௪௪௫ |
| எஸ். குயூ. அரிசி | ௪௫௫ |

வெளியூர் விலைகள்:—

| | |
|---|---|
| ஜுலை | ௪௧௯ |
| ஆகஸ்டு | ௪௧௮ |

---



# கப்பற் செய்தி.

கப்பல்கள் நாகபட்டினத்திலிருந்து மலாய் நாட்டிற்குப் பிரயாணமாகும் விபரம் வருமாறு:—

| கப்பல். | புறப்படும் தேதி. |
|---|---|
| ரஜுலா | ஜுலை ௨௮—உ |
| எதியோபியா | ஆகஸ்டு ௩—உ |
| ரோகினு | „ ௧௧—உ |
| எதியோபியா | „ ௧௭—உ |

கப்பல்கள் மலாய் நாட்டிலிருந்து நாகபட்டினம் வந்துசேரும் விபரம் வருமாறு:—

| கப்பல். | வந்துசேரும் தேதி. |
|---|---|
| எதியோபியா | ஜுலை ௩௦—உ |
| ரோகினு | ஆகஸ்டு ௫—உ |
| எதியோபியா | „ ௧௩—உ |
| ரஜுலா | „ ௧௫—உ |

கப்பல்கள் புதுச்சேரியிலிருந்து செய்கோன், சிங்கப்பூர் முதலியவிடங்களுக்குப் பிரயாணமாகும் விபரம் வருமாறு:—

| கப்பல். | புறப்படும் தேதி. |
|---|---|
| அஸேலி ரிடியூ | ஆகஸ்டு ௭—உ |
| அம்பாயிஸ் | செப்டம்பர் ௪—உ |
| கம்பெயின் | அக்டோபர் ௨—உ |

---

### 'லார்டுகோஷன் கார்'
### ராவ்பகதூர் சபாரத்னம் செட்டியாரின் நன்கொடை.

ராவ்பகதூர் சபாரத்னம் செட்டியாரவர்கள் சென்னை கவர்ன்மெண்டின் விவசாய இலாகாவுக்கு நன்கொடையாக அளித்திருக்கும் 'லார்டு கோஷன் கார்' என்ற விவசாய வண்டி ஜுலை ௧௦-ம் தேதி கனம் டாக்டர் சுப்பாராயன் அவர்களால் திருச்சிடவுன் ஹாலில் திறந்து வைக்கப்பட்டது. விவசாய டயரக்டர் திரு. குழந்தைசாமி பிள்ளை அவர்கள் காரின் சரித்திரத்தை எடுத்துக்கூறித் திறந்து வைக்கும்படி மந்திரியைக் கேட்டுக் கொண்டார். நன்கொடை யளித்தவருக்கு நன்றி செலுத்திவிட்டு, காரின் உபயோகத்தையும், அதில் கோஷன் பிரபு கொண்டிருக்கும் ஆர்வத்தையும் முதன் மந்திரி எடுத்துக்கூறினர். கிராமவாசிகளுக்கு விவசாய முறைகளை நன்கு விளக்க இத்தகைய கார்கள் மிக உபயோகமாகின்றனவென்றும், அமெரிக்காவில் ரயில் வண்டிகள் மூலம் இப்பிரசாரஞ் செய்யப்படுகின்றதென்றும், இந்தியாவில் கிராமங்களை அடுத்து ரயில்பாதை இல்லாததால் மோட்டார் வண்டிகளை உபயோகிப்பது நல்லதென்றும், இம்மாகாணத்தில் இதைப்போல் ஏற்கனவே இரண்டு கார்களிருக்கின்றனவென்றும், இப்பொழுது அமைக்கப்பட்டிருக்கும் கார் தெற்கு ஜில்லாக்களில் உபயோகிக்கப்படுமென்றும் அவர் கூறிவிட்டு காரைத் திறந்துவைத்தார். குரூப் போட்டோ எடுக்கப்பட்டது. பொதுஜனங்களுக்குக் காரின் உபயோகம் விளக்கப்பட்டது.

---

### டாக்டர் பர்னர்டோ விடுதிகள்.

உலகிலேயே டாக்டர் பர்னர்டோவின் விடுதிகள்தான் அதிகப்படியான மக்களுக்கு உணவளித்துவருகின்றன. சென்ற வருடத்தில் ௧௮,௦௯௩ குழந்தைகளும் இளைஞர்களும் விடுதிகளால் போஷிக்கப்படுகின்றன. தினந்தோறும் ௨௮,௦௦௦ பேர்களுக்கு ஆகாரமளிக்கப்படுகின்றது.

---

# ஸர். மு. சித. முத்தையா செட்டியார் காலஞ்சென்றார்.

கானடுகாத்தான் ஸர். மு. சித. முத்தையாசெட்டியாரவர்கள், சின்னளாக நோய்வாய்ப்பட்டிருந்து நிகழும் ஆடி ௴ ௪உ வெள்ளிக்கிழமை காலையில் கானடுகாத்தானில் இவ்வுலகைவிட்டுப் பிரிந்தனர் என்பது பொதுவாகச் சென்னை மாகாணத்து மக்களனைவர்க்கும் சிறப்பாகச் செட்டிமார் நாட்டவர்க்கும் பெருவருத்தந் தருவதாகும். அன்னுர் இறப்பதற்கு முன்னர் சுமார் ஐந்து நாட்கள் நோயால் வருந்தினதாகத் தெரிகிறது. அன்னுருக்கு ஆஸ்த்மா வியாதி உற்றிருந்ததாகத் தெரிகிறது. சிறந்த வைத்திய சிகிச்சைகள் செய்யப்பெற்றன; ஆயினும் எதிர்பாராத வண்ணம் வெள்ளிக்கிழமையன்று திடீரென ஹிருதய வீழ்ச்சியால் இவ்வுலகை நீத்தனர். சென்னையிலிருந்து அவரது மூத்த புதல்வர் சிதம்பரஞ்செட்டியாரும், சிறிய தந்தையாராகிய ராஜா ஸர். அண்ணாமலைச் செட்டியாரும் தனிக்கார்களில் வந்து சேர்ந்தனர். திவான்பகதூர் அ. மு. மு முருகப்பசெட்டியார் முதலிய தனவைசிய நண்பர்கள் பலர் வந்திருந்தனர். திரளான கூட்டம் பின்செல்ல சிறப்பாகத் தகனக்கிரியைகள்செய்யப்பெற்றன. ஸர். செட்டியாரவர்களுக்கு இப்பொழுதுவயது ௬௩ ஆகும். இவ்வளவு சீக்கிரமாக வாழ்வின் முற்பகுதியில் உயிர் நீத்தது ஆற்றொணுத் துயரளிப்பதாகும். ஸ்ரீமான் செட்டியாரவர்களுக்கு இரண்டு புதல்வர்களும் இரண்டு புதல்விகளும் இருக்கின்றனர். அன்னுர் மனைவியாரும் தாயாரும் அன்னுர் பிரிவால் பெருந்துயருறுவர். அன்னுர் பிரிவைக்கேட்டு வருந்திச் சென்னையிலிருந்தும் வேறு பல இடங்களிலிருந்தும் பல பிரமுகர்கள் அநுதாபத்தந்திகள் அனுப்பியிருக்கின்றனர். அன்னுர் பிரிவிற்கு வருந்துமுகத்தால், சென்னையில் அவரது தொடர்பு பெற்று விளங்கிய பல நிலயங்கள் அன்று ஞாடகார்த்தமாக மூடப்பெற்றிருக்கின்றன.

காலஞ் சென்ற
ஸர் மு. சித. முத்தையா செட்டியார்.

### அவர் வரலாறு.

காலஞ்சென்ற ஸர். மு. சித. முத்தையா செட்டியாரவர்கள் கானடுகாத்தானில் ௧௮௮௭-ம் ௵ பிப்ரவரி ௴ ௨௨ பிறந்தார்கள். சிதம்பரம் ஹைஸ்கூலிலும், புதுக்கோட்டை மகாராஜாவின் காலேஜிலும், கல்வி கற்றனர். கல்வி கற்றதும், ஐரோப்பா தேசயாத்திரை செய்து ஆங்குள்ள அரசியல் நிலையினையும் பொருளாதார நிலையினையும் உணர்ந்து பலவகை அறிவு பெற்றுத் திரும்பிவந்தனர். வந்ததும் வியாபாரத்துறையில் பெரிதும் ஈடுபடலாயினர். அமைதியாகவும் திறமையாகவும் தொழில் முறையினை நடத்தி வாழ்பவர் என்ற பெயர் அவருக்கு உண்டு. சென்னையில் அவர் பிரபலமான பொது நிலயங்கள் பலவற்றில் ஈடுபட்டிருந்தார். தென்னிந்திய வர்த்தக சங்கத்தின் தலைவராகவும், யுனைடெட் இந்தியா லைப் இன்ஷுரன்ஸ் கம்பெனித் தலைவராகவும், இந்தியன் பாங்க் டைரக்டர்களில் ஒருவராகவும், பச்சையப்பன் அறநிலைப் பாதுகாப்பாளரில் ஒருவராகவும், சென்னை பல்கலைக்கழக உறுப்பினராகவும், சென்னை துறைமுகப் பாதுகாப்புச் சங்க அங்கத்தினராகவும், ஹிந்து ஹைஸ்கூல் கமிட்டித் தலைவராகவும், தென்னிந்திய ரயில்வே அட்வைஸரி கமிட்டி அங்கத்தினராகவும் விளங்கினர். சென்னை நகரின் 'ஷெரிப்' பதவியில் ௧௯௨௪-ல் இரண்டு ஆண்டுகள் இருந்தார். சென்னைக் கார்ப்பொரேஷன் அங்கத்தினராக நீண்ட நாளிருந்தனர். ௧௯௨௩-௧௯௨௬-ல் சென்னை சட்டசபை அங்கத்தினராக விளங்கினர். ௧௯௨௩—௧௯௨௪-ல் லெஜிஸ்லேட்டிவ் அஸெம்ப்ளி அங்கத்தினரா யிருந்தனர். ௧௯௨௨-ல் ஸர் பட்டம் பெற்றார். இளவாசர் வரவேற்புக் கமிட்டியின் அமைச்சராக இருந்து புகழ் பெற்றார். சென்னையிலிருக்கும் பொழுது அன்னுர் காஸ்மாபாலிடன் கிளப்பிற்கு நாள் தோறும் செல்வதுண்டு. எப்பொழுதும் யாவருடனும் சிரித்த முகத்துடனும் அன்புணர்ச்சியுடனும் பேசுவார். அவருக்கு உல்லாசமான விளையாட்டுக்களில் மிகுந்த பிரியமும் தன்மையான அறிவும் உண்டு. அவர் செட்டிமார் நாட்டில் செல்வாக்கும் செல்வமும் நிறைந்த ஒரு கனவானும் தனவானுமாக விளங்கினர். சென்னை நகரில் அவர்சிறந்த அறிவாளிகளுக்கிடையே பெருஞ்சிறப்புப் பெற்றிருந்தார். அவருடைய கண்ணியம் வாய்ந்த குணத்தையும் நேர்மையான நோக்கத்தையும் கூர்மையான அறிவுத்திறமையையும் அழகிய பேச்சு வன்மையையும், கம்பீரமான தோற்றத்தையும் அமைதியும் திறமையும் மிக்க செயல் திறனையும், போற்றுதவரிலர். பல பொதுக்காரியங்களுக்கும், பொதுநிலயங்களுக்கும் தக்க பண உதவி செய்திருக்கிறார். வியாபாரவளர்ச்சியிலும் கல்வி வளர்ச்சியிலும் அவர் பெரிதும் ஈடுபட்டிருந்தார். தனவைசிய வகுப்பாரில் முதலாவதாக அரசாங்கச்சார்பில், திறமையும் தகுதியும் நிறமும் வாய்ந்தவரென்று மதிக்கப் பெற்றவர் ஸர் செட்டியாரேயாவர். இவர்கள் குடும்பமே தென்னாட்டில் கீர்த்தி பெற்ற குடும்பங்களில் ஒன்றாக விளங்குகிறதெனல் மிகையாகாது. இவரும் இவரது இளைய சகோதரரான புகழ் பெற்ற பெத்தாச்சி வள்ளலும், ராஜா சர் அண்ணாமலைச் செட்டியாரும் பொதுஜன நலனையும் சேவையையும், ஆதரித்து வளர்க்குமுகத்தால் பெரும் புகழ் பெற்று மிளிர்கின்றனர். ஸ்ரீமான் முத்தையா செட்டியாரவர்கள் தேசிய முன்னேற்றத்திலும் சமூக முன்னேற்றத்திலும் பிரியமுடையவராவர். பிராமணரல்லாதாரியக்கத்தில் அபிமானங் கொண்டிருந்தனர். சென்னையில் கூடிய பிராமணரல்லாதார் மகாநாட்டில் ஒருமுறை தலைமையும்வகித்தனர். கலாசாலை, கழகங்கள், விளையாட்டுகள் விழாக்களில் பல இடங்களில் கலந்து கொண்டு தலைமை வகித்துப் பரிசளித்தின்புற்றிருக்கின்றனர். இவ்வாறு கலந்துகொண்டு அமைதியாகப் பொதுநிலயங்களை வளக்கப்படுத்துவதில் அன்னுருக்கு மிகுதியும் விருப்பம் உண்டு. சென்னை சுகபோசக ஆஸ்பத்திரிக்கு ௫௦௦௦௦ ரூபாய்களும் யுத்த பண்டிற்கு ௭௦௦௦௦ ரூபாய்களும் அளித்திருக்கின்றனர். ஸ்ரீமான் செட்டியாரவர்கள், செட்டிமார் நாட்டின் முக்கியஸ்தர்களில் ஒருவராக விளங்கினதோடு சென்னை மாகாணத்தின் பிரதம புருஷர்களில் ஒருவராகவும் பிரகாசித்துப் பெரும் புகழும் பெற்று மிளிர்ந்தவராதலால், அவரது பிரிவால் சென்னைமாகாணம் ஒரு சிறந்த பெரிய மனிதரை இழந்து விட்டது. செட்டிமார் நாடு ஒரு கண்ணியம் வாய்ந்த கனவானை இழந்து விட்டது. சென்னை நகரம் ஒரு முடி மணியை இழந்து விட்டது. கானடுகாத்தான் ஒரு அரிய கண்மணியை இழந்துவிட்டது. அன்னுர் குடும்பத்தினர் ஒரு புகழ்மலரைப் பிரிந்து விட்டனர். ஸர். முத்தையா செட்டியார் இதுபொழுது பிரிந்துவிட்ட போதிலும் அவர் பெயரானது எப்பொழுதும், சென்னைமாகாணத்தில் ஒளித்துக் கொண்டிருக்குமென்பதில் ஐயமில்லை.

---

# கலப்பு மணத்துக்கு ஆதரவு.

திருவாளர் சொ. முருகப்பா அவர்கள் செய்துகொண்ட கலப்புமணத்தை பாராட்டி மூவார் தனவைசிய வாலிபர்கள் ஒரு வாழ்த்துத் தந்தி அனுப்பியிருக்கின்றனர். அது வருமாறு:—

மூவார், ஜுலை 16—

உங்கள் கலப்பு மணத்தைக் கேட்டு மகிழ்ச்சி யடைகிறோம். உங்களையும், மரகதவல்லியாரையும் கடவுள் ஆசிர்வதிப்பாராக. உங்கள் கலப்புமணம் நமது தனவைசிய சமூகத்திற்கு ஒரு அரிய பாடமாகும்.

தனவைசிய வாலிபர்கள்.

# "எனது வாழ்க்கைக் கதை"

(லாலா லஜபதிராய்.)

(சென்ற வாரத் தொடர்ச்சி.)

நான் ஹிஸ்ஸார் செல்வதற்கு முக்கிய காரணம் ராம்ஜிதாஸ்தான். தமது சார்பாக ஒரு வழக்கை நடத்தும்படி அவர் என்னை ரோஹ்தக்கிலிருந்து அழைத்தார். எதிர்க்கட்சி அரசாங்கமாயிருந்தது. ஒரு நல்ல இடத்தையும் பார்த்துக்கொண்டிருந்தேன். ஹிஸ்ஸார் எனக்குப் பிடித்தமாயிருந்ததால் நான் அங்கு சென்று தங்கினேன். ராம்ஜிதாஸ் என்னை அடிக்கடி வந்து பார்ப்பார். புதிய கற்றவர்களைத் தாம் நம்பவில்லையென்றும், மதிக்கவில்லையென்றும் கூறுவார். இவர்களிடத்தில் ஒழுக்கக்குறைவிருப்பதாக அவர் எண்ணினர். எனினும் என்னிடத்தில் அவர் முழு நம்பிக்கைகொண்டிருந்தார். நான் ஹிஸ்ஸார் போவதற்கு முன்னரே அவர் வீட்டிலும் ஆரிய சமாஜக் கொள்கைகள் புகுந்துவிட்டன. அவர் ஆரிய சமாஜக் கொள்கைகளில் நம்பிக்கை கொள்ளவில்லையெனினும் அவரது நோக்கம் தாராளமானதாயிருந்தது. நான் ஹிஸ்ஸாரை அடைந்தபொழுது, அவ்வூர் வாசியும் சமஸ்கிருத அறிஞருமான பண்டித கங்கா சாஹி என்பவர் ஒரு சங்கத்தை நடத்தி வேதாந்தத்தைப் பிரசாரஞ்செய்து வந்தார். இச்சங்கக் கூட்டங்களுக்கு நண்பர்கள் பண்டித லக்பத்ராயும், பாபு சூடாமணியும், நானும் அடிக்கடி சென்று வந்தோம். ஆனால் பிற்பாடு ஒரு ஆரியசமாஜத்தை அங்கு ஸ்தாபிப்பதென முடிவு செய்தோம். முடிவில் சங்கம் ஸ்தாபிக்கப்பட்டது. மிகுந்த புகழ்பெற்றவரும் பொதுநலப் பிரியருமான ராம்ஜிதாஸின் பேரர் சண்ட்லால் தலைவராகவும், நான் காரியதரிசியாகவும் நியமிக்கப்பட்டோம்.

## அத்தியாயம் ௬.

சண்ட்லால் இறப்பதுவரை அதன் தலைவராகவிருந்தார். ௧௮௮௬-ல் நாங்களிருவரும் கொண்ட நட்பு ௧௯௦௬-ல் அவர் இறப்பதுவரை நீடித்திருந்தது. சண்ட்லால் உயர்ந்த உறுதியான குணமுடையவர்; அவரது பாட்டனாரைபோல எப்பொழுதும் நாணயமாகவிருந்தார். ஆண்மையும் தைரியமும் உருக்கொண்டு விளங்கினர். பிறருடைய துன்பங்களைத் தம்முடைய துன்பங்களாகப் பாவித்து நடந்தார். கஷ்டப்படும் எம்மனிதனும் அவரையடைந்து உதவி பெறாமல் போன எச்சந்தர்ப்பத்தையும் எனக்கு ஞாபகப்படுத்த முடியாது. அவரது பட்டணத்திலும், ஜில்லாவிலும் உள்ள ஒவ்வொருவருக்கும் அவர் நண்பராகவும், யோஜனை கூறுபவராகவும் இருந்தார். வழக்குகளிலும், வியாபாரத்திலும் அவரது யோசனையையும் உதவியையும் மக்கள் நாடிப் பலனடைந்தனர். குழந்தைகளின் கல்வி விஷயத்திலும் அவரது யோசனைப்படி நடந்தனர். சுருக்கமாகக் கூறுமிடத்து, சமய, சமூக, தர்ம தேசிய விஷயங்கள் யாவற்றிலும் அனைவரும் அவரது அபிப்பிராயத்தைக் கேட்டறிவது வழக்கம். அவர் பெற்ற கல்வி சிறிதுதான். கொஞ்சம் வடமொழியும், ஹிந்தியும் சாதாரண உருதுவும் அவருக்குத் தெரியும். ஹிந்துக் கணக்கு முறையில் அவர் மிகத் திறமைசாலி. வியாபார சம்பந்தமாக உண்டியல் முதலியவை எழுதுவதில் அவர் ஒரு நிபுணராகக் கொள்ளப்பட்டார். ஒரு பெரிய பூஸ்திதியைப் பராமரிக்கத்தக்க சக்தி அவரிடம் இருந்தது.

அவருடைய ஆதிக்கத்தின்கீழ் மூன்று குடும்பங்களிருந்தன. சிறந்த நுட்ப புத்தியுடையவர். சகல விஷயங்களிலும் அக்கறையெடுப்பவர். எப்பொழுதும் அவரது நட்பு உறுதியானதாகவே இருந்தது. உயர்குடியிற் பிறந்தவராதலின், மிகுந்த செலவாளியாயிருந்தார். ஆனால் அதேசமயத்தில் ஒழுக்கத்திலும் உயர்ந்து நின்றார். பெருஞ் செல்வந்தராயிருந்தபோதிலும், பிறருக்கு உதவி செய்வதிலும், பிறருடைய துன்பங்களைத் தமது துன்பங்களாகக் கருதுவதிலும் விருப்பங் கொண்டவராயிருந்தார். விலையுயர்ந்த மருந்துகளை இலவசமாகக் கொடுப்பதுமன்றி, சில சமயங்களில் நடுயாமத்திலும் ஜனங்கள் அவரை எழுப்ப அவர் அவர்களைப் பின் தொடர்ந்து நோயாளிகளைப் பார்க்கச் செல்வதும் உண்டு. பகலிலோ இரவிலோ எப்பொழுதும் தயாராகவே இருப்பார். கடவுள் அவருக்கு அதிசயிக்கத் தக்க குணங்களைக் கொடுத்திருந்தார். அவர் உயரிய கல்வி கற்றிருந்தால் நாட்டிலுள்ள பிரபல தலைவர்களில் ஒருவராக விளங்கியிருப்பார் என நம்புகிறேன்.

ஒரு சமயம் டிப்டி கமிஷனர் அவருடன் சண்டையிட்டார்; இதனால் பட்டணம் முற்றும் வேலை நிறுத்தஞ்செய்தது. விசாரணை செய்யவந்த கமிஷனர் 'நீங்கள் ஜில்லாவின் ராஜா' என்று கூறினார். சண்ட்லாவின் அபாரப் புகழையும் செல்வாக்கையும் இது ரூபிக்கின்றது.

௨௦ வருடங்களுக்கதிகமாகவே அவர் சமாஜத்திற்குப் பலவிதங்களில் உதவிபுரிந்து தியாகஞ்செய்தார். இதன் பலனாக அவ்விடத்தில் ஹிஸ்ஸார் ஆரியசமாஜம் ஒரு பெரிய படையாக ஆயிற்று. ஆசியலைப் பற்றி அவர் நன்குணர்ந்திருந்தாராயினும், அதனுடன் அவர் கைகலந்ததில்லை. எப்பொழுதேனும் அரசியல் பிரச்னையைப் பற்றி அவர் முன் ஆலோசனை செய்யப்பட்டால், அதை அவர் நன்குணர்ந்துகொள்வார். அங்குள்ள அதிகாரிகளுடன் அவர் சிநேகபாவத்துடனேயே நடந்துகொண்டார்.

௧௯௦௭-ல் அரசாங்கம் என்னை நாடுகடத்தியது அவருக்கு ஒரு சோதனையாயிற்று; அச்சோதனையில் அவர் வெற்றிபெற்றார். ஜில்லா உத்தியோகஸ்தர்கள் எங்கள் நட்பை அறிந்திருந்தார்கள். ஆனால் அவர் என்னை எப்பொழுதும் விட்டுவிடவில்லை. எனது தஸ்தாவேஜிகள் யாவும் இரண்டு வருடகாலமாய் அவரிடமிருந்தன. 'நான் லஜபதிராயின் நண்பன்; அவரது குற்றமற்ற தன்மையை நான் அறிவேன்' என அவர் உத்யோகஸ்தர்களுக்குக் கூறினார். பலமற்ற நண்பர்கள் என்னைக் கைவிட்ட சமயத்தில் அவர் மட்டும் என் பக்கத்திலேயே நின்றார். நான் திரும்பி வந்த பிறகுப் பலமுறை அவருடன் தங்கியிருந்தேன். அடிக்கடி இருவரும் சேர்ந்து பிரயாணஞ் செய்தோம்; ஒருமுறை மூன்று வாரகாலமாக டோரடன்னில் நான் அவருடனிருந்தேன். நான மாண்டலேச் சிறையிலிருந்த பொழுது கூட எங்களிருவருக்கும் கடிதப் போக்குவரத்திருந்தது. இக்காலத்தில்தான் பல நெருங்கிய நண்பர்கள் என்னைக் கைவிட்டார்கள். பணக்காரர், உத்யோகஸ்தர்கள், பட்டதாரிகள் ஆகியோர் என் சம்பந்தத்தையே வெறுத்தனர். ஆனால் சண்ட்லால் தைரியமாகவும், வெளிப்படையாகவும் தமது கடமையைச் செய்தார்.

(தொடரும்)

---



டாக்டர்

## சத்தியபால் வழக்கு.

### இரண்டு வருடக் கடுங்காவல்.

மார்ச்சு௴ ௨௦-ம் தேதி டாக்டர் சத்தியபால் டில்லியில் நிகழ்த்திய பிரசங்கத்தில் ராஜத் துவேஷம் உண்டுபண்ணக்கூடிய பகுதிகள் இருப்பதாகக் குற்றஞ் சாட்டி டாக்டர் சத்தியபால்மீது வழக்குத் தொடரப்பட்டது. டெல்லி அடிஷனல் ஜில்லா மாஜிஸ்திரேட் கோர்ட்டில் விசாரணை நடைபெற்றது. ஜூலை ௨௦-ம் தேதி டாக்டர் சத்தியபால் ஒரு வாக்குமூலத்தை எழுதிக் கொடுத்தார். அதில் சுயராஜ்யத்தை ஏற்படுத்த வேண்டுமென்ற நோக்கத்துடனேயே தாம் அவ்விதம் பிரசங்கஞ் செய்ததாகவும், தற்பொழுதுள்ள ஆட்சி முறையில் தமக்கு அதிருப்தி ஏற்பட்டுள்ளதென்றும், இவ்வுணர்ச்சியும் விருப்பமும் கொள்ளாத உண்மையான இந்தியர் எவருமே இல்லையென்றும், தமது அபிப்பிராயங்களைப் பகிரங்கமாக அஞ்சாது எடுத்துரைக்கத் தாம் கடமைப்பட்டிருப்பதாகவும் அதில் குறித்திருக்கிறார்.

ஜூலை ௧௧-ம் தேதி வழக்கில் தீர்ப்புச் சொல்லப்பட்டது. இரண்டு வருடக் கடுங்காவலும், ௫௦௦ ரூ. அபராதமும் விதிக்கப்பட்டன. தீர்ப்பு முடிந்ததும், மாஜிஸ்திரேட்டிற்கு டாக்டர் சத்தியபால் வந்தனமளித்துத் தீர்ப்பை ஏற்றுக் கொண்டார். பலர் சத்தியபாலுக்கு மாலையிட்டு ஜெய கோஷ்டிச் செய்தனர்.

அப்பீல் செய்து கொள்ளப்படும் எனத் தெரிகிறது.

---

### ஒரே கர்ப்பத்திற் ௩ குழவிகள்.

மாயவரம் தாலூகாவைச் சேர்ந்த தர்மதானபுரம் கிராமத்தில் படையாட்சி வகுப்பைச் சேர்ந்த ஒரு மாது ஜூலை ௯-ம் தேதி இரண்டு ஆண்குழந்தைகளையும் ஒரு பெண் குழந்தையையும் பிரஸவித்ததாகவும் மூன்று குழவிகளும் தாயும் சுகமா யிருப்பதாகவும் அறிவிக்கப் பட்டிருக்கிறது.

### வகுப்பு வேற்றுமையை ஒழிக்கத்தடை.

லாகூரில் ஜாதிப் பிரிவுகளை ஒழிப்பதற்காக ஒரு சங்கம் நிறுவப்பட்டிருக்கிறது அச்சங்கத்திலிருந்து 'கிராந்தி' என்னும் பெயருடன் ஒரு மாதாந்தப் பத்திரிகை வெளியிடப் பட்டு வருகிறது. ஜாதிப்பிரிவு ஒழிய வேண்டும் என்ற நோக்கத்தை அப்பத்திரிகை கொண்டிருப்பதால் அது சமஸ்தானத்துக்குள் வரக் கூடாதெனத் திருவிதாங்கூர் அரசாங்கம் தடையுத்தரவு பிறப்பித்திருக்கின்றதாம்.











## நோட்டீஸ்.

தேவகோட்டை டி. மு. கோர்ட்டு.

O. S No. 139 of 1929
I A No. 411 of 1929

அனுமந்தகுடி யிலிருக்கும் சுப்பய்யா பிள்ளை மகன் ந. சுப. பழநிச்சாமி பிள்ளை } வாதி.

தேவகோட்டை மெ. அரு. அரு. அருணாசலம் செட்டியார்-1, ஷை யூர் மெ. அரு. நா. ராமநாதன் செட்டியார்-2. மதரூஸ் அபியஷில் அஸைனி-3. அனுமந்தகுடி மு. வீர. வழியாச்சியாபிள்ளை-4. ஷை யூர் மு. நாருயண பிள்ளை-5. ஷை யூர் காசிநாத பிள்ளை-6. } பிரதிவாதிகள்.

இதனால் சகலமான பேர்களுக்கும் தெரிவிப்ப தென்னவென்றால்:—

ஷை நம்பரில், அனுமந்தகுடி கிருமத்திலுள்ள கண்மாய் களிலிருந்து வாதியின் மானிய நிலத்திற்கு தண்ணீர் பாய்ச்சிக் கொள்ள ஷை யாருக்குள்ள பாத்தியதையை டிக்ளேர் செய்து அவ்விதம் தண்ணீர் பாய்ச்சிக் கொள்வதை ஷை அனுமந்தகுடி கிருமக் குடிகளும் மேல்வாற தார்களும் எவ்விதத்திலும் தடைசெய்யாமலிருக்க சாசுவத இஞ்சங்ஷன் கோரி வாதி செய்திருக்கும் வியாஜ்யத்தில் ஷை கிருமக்குடிகள் எல்லோருக்குமாக ஷை 4-5-பிரதிவாதிகளை Representatives ஆக நியமித்துக் கொண்டு வியாஜ்யத்தை மேல் நடத்த வேண்டுமென்று ஷை யார் மனுச் செய்து கொண்டிருப்பதால் அதற்கு 19—8—1929-ல் வாய்தா ஏற்பட்டிருக்கிறது. அது விஷயத்தில் ஆக்ஷேபணை யுள்ளவர்கள் ஷை தேதியில் காலை 11 மணிக்கு ஷை கோர்ட்டு முன்பாக ஆஜராகி ஆக்ஷேபணையை தெரியப்படுத்திக் கொள்ளலாம்.

தேவகோட்டை 16—7—1929 } R. Satyamurti Iyer. வாதி வக்கீல்.

---

## அறிவிப்பு.

இதனால் சகல ஜனங்களுக்கும் தெரிவிப்பதென்னவென்றால் எனது சிறிய தாயார் பேரன் 18- வயதுள்ள ராமய்யா என்பவன் என் பெயரைக் கொண்டும், பொய்க் கடிதங்களைக் கொண்டும் பல இடத்தில் ரூபாய் வாங்குவதாகத் தெரிகிறது இந்த தேதி முதற்கொண்டு யாரேனும் அவனுக்குப் பணம் கொடுப்பார்களானால், நான் அக் கடன்களைத் திர்க்க ஒப்புக் கொள்ளமாட்டேன் என்பதை பத்திரிகை மூலியமாய்த் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

தக்ஷிணாமூர்த்திபிள்ளை,
மிருதங்கம் வித்வான், புதுக்கோட்டை.
(521)



## நோட்டீஸ்.

இதனால் பொது ஜனங்களுக்குத் தெரிவிப்பதாவது:—

24—5—29-ல் பகல் 12 மணிக்கு யெனது புத்திரன் 13 வயது பொட்டின் தளம்பு அடையாளமுள்ள சுந்தரம் செட்டி காரையார் கோவில் உர்ச்சவ தினத்தன்று யென் குடும்பத்தாரோடு போயிருந்தவன் ஜனக்கூட்டத்தில் தவறி இன்ன இடத்தில் இருக்கிறானென்பது தெரியாமல் இன்றுவரை தேடியும் அகப்படவில்லை. ஷையானைக் கண்டு யெங்களிடம் ஒப்பிவித்தாலும் அல்லது யிருக்குமிடம் தெரிந்து யெங்களுக்கு கடதாசி மூலம் யெழுதி ஒப்புத்தந்தாலும் ரூபா 50 இனம் அளிக்கிறோம்.

மு. பள. கரு. வினைதீர்த்தான் செட்டி,
தேவகோட்டை.
தற்சமையம். காலி. 42 கெ. கிட்டங்கி, சிலோன்.
25—6—29.

(522)



## நோட்டீஸ்.

சிவகெங்கை சப்கோர்ட்டில்.

1929 ஞு O. S. No. 17.

திருப்பத்தூர் தாலூகா நாச்சியாபுரம் ஆறுமுகம் செட்டியார் மகன் ஆ ந ஆ. சாமிநாதன் செட்டியாகிய ஆறுமுகம்செட்டியார். } வாதி.

1. திருப்பத்தூர் தாலூகா சிறுவயல் குப்பச்சி அம்பலம் மகன் கு. கருத்தானம்பலம்.
2. ஷை மகன் குப்பச்சி அம்பலம். } பிரதிவாதிகள்.

திருப்பத்தூர் தாலூகா சிறுவயல் உள்க்கடை நாச்சியாபுரம் கிராமத்தில் காட்டுநாச்சி அம்மன் கோவில் புாவில் தேவகோட்டை ரோட்டி லிருந்து நாச்சியாபுரத்துக்குப் போகிற வண்டிப் பாதையாகிய தேரோடும் வீதிக்கும் மேற்கு, மேலோடிய தேரோடும் வீதிக்கும் வடக்கு, காலியிடத்துக்கும் கிழக்கு, வாதி காம்பவுண்டுக்கும் தெற்கு இதற்குள்பட்ட இட விஷயமாய் அக்கிரமச் செய்கையை நிவர்த்தி செய்யவும் ஸ்வாதீனத்துக்கும் பெர்மெனென்டு இஞ்சங்ஷனுக்கும் பின்னும் மற்ற பரிகாரங்கள் கோரி வாதியால் இந்த நெம்பரில் பிறுது செய்து 1929 ஞு ஆகஸ்ட்டு௴ 12௳ வாயிதா யேர்ப்பட்டிருக்கிறபடியால் ஷை வாயிதாவன்று பகல் 10 மணிக்கு 2-ம் பிரதிவாதி நேரிலாவது பேஜண்டு மூலமாகவாவது அல்லது வக்கீல்கள் மூலமாகவாவது சிவகெங்கை சப் கோர்ட்டாரவர்கள் முன்பாக ஆஜராகி அவருக்குள்ள எதிர்வாதங்களை தெரிவித்துக் கொள்ளாவிட்டால் கோர்ட்டாரவர்கள் 2-ம் பிரதிவாதியை யெக்ஸ்பார்ட்டியாக தீர்மானம் செய்து கேசை மேல்நடத்துவார்கள்.

A. Somasundaram Iyer,
அட்வகேட்.
12—7—29.

---

(இம் பக்கத் தொடர்ச்சி)

இந்தக் குடும்பத்தில் ஒருவன் ஆண் குழந்தையின்றி மனைவியையும், பெண் குழந்தைகளையும் விட்டு விட்டு இறப்பானுயின் அவர்கள் கதி அதோ கதிதான். அவனுடைய பாகத்தில் அவர்களுக்குப் பங்கு கிடையாது. குழந்தைகளுக்கும் கல்யாண மாகும் வரை அன்னவஸ்திரமும் கல்யாணச் செலவும், மனைவிக்குச் சாகும்வரை அன்னவஸ்திரமும் மட்டுமே கிடைக்கும். அதுவுங்குடும்ப மானேஜர் நல்லவனுயிருந்தால் மட்டுமே தான். இல்லேல், கஞ்சிக்கு வழியற்ற விதவை,வக்கீல்கள், வக்கீல் குமாஸ்தாக்கள் காலில் வீழ்ந்து கோர்ட்டு மூலமாய்த் தான் அதையும் பெறமுடியும். மனைவிக்கும் பெண் குழந்தைகட்கும் சொத்தில் பங்குடன் கூட மறுமணமும் செய்து கொள்ளலாமென்ற வழக்க மிருந்துமாயின் அவர்கள் இவ்வாறு அஞ்ச வேண்டிய அவசியமே யில்லை. எதிரியின் கத்தி நெஞ்சிற் பாயவேண்டிய தில்லை அவிபக்த குடும்ப வாழ்க்கை இந்துக்களுக்கு எவ்வாறு கெடுதல் செய்கின்ற தென்பதனைக் கண்டோம். இவைபோன்ற பழக்கவழக்கச் சட்டங்கள் இன்னும் மிகப் பல. இவற்றை யெல்லாம் நன்கு, ஆராயின் நாட்டிற்கு எவ்வாறு கேடு விளைந்திருக்கின்ற தென்பது நன்கு விளக்கும்.

இவ்வியக்கத்தின் உற்ற துணைவனுன தமிழ் மணம் கமழும் நல்லிதழ் "குமரனி" ன் ஆசிரியர் முருகப்பருக்கும், மாகதவல்லியம்மைக்கும் சமீபத்தில் நடந்த காதல், கலப்பு விதவை சுயமரியாதைத் திருமணம் ஒன்றே இவ்வியக்கத்திற்குச் சிறந்ததொரு வெற்றியாகும். பின்னும், காதலோடுகூடிய கலப்புமணம் சமீபத்தில் சுயமரியாதையினுதவில் எத்தனையோ நிகழ்ந்துவிட்டன. ராமராச்யத்தில் புலியும் புல் வாயும் ஒரு துறையில் நீருண்டனவென்று கேட்டாவதிருக்கின்றோம். ஆனுல், தமிழ் நாட்டில் சைவ வேளாளரும், ஆதித்திராவிடரும், மகம்மதியரும் பகிரங்கமாய் ஒரு பந்தியிருந்து உண்ணுவார்களென்று சுமார் மூன்று வருடங்களுக்கு முன் வரை கனவிலும் நினைக்கவாவது முடியுமா? இப் பொழுதோ அத்தகைய சமபந்திபோஜனங்கள் சர்வ சாதாரணமாய்விட்டன. இதையெல்லாம் கவனிக்கும் பொழுது சுயமரியாதை இயக்கம் கூடியசீக்கிரம் செய்து முடிக்கலாற்றுது வதெனுமுனதோ என்ற சங்கையே நிகழ்கின்றது.சமபந்தி போஜனம் கலப்புமணம் இவற்றின்முன் சாதியெங்கே? சமூகக் கொடுமை யெங்கே? சாதி சமூகக் கொடுமையெங்கே? ஒழியின் அடிமைத்தன்மையெங்கே? தமிழ்நாட்டிலுதித்த இத்துய இயக்கம் தீவிரமாய் மற்றமாகாணங்களிலும் பரவி மேஜுன்றி வருகின்றது. இவ்வியக்கத்திற்கு முக்கிய ஆதரவு மாதர்களால்தான் அளிக்கப்படல் வேண்டுமென்பது வெள்ளிடைமலை. ஆகையால் சகோதர சகோதரிகளே! நீங்கள் "குடி அரசு" "திராவிடன்" "குமரன்" இவைகளுடன் ஒத்துழைத்து உற்றாருறவினர் மற்றையோரையும் ஊக்கப்படுத்தி நாட்டின் விடுதலையைக் கூடிய சீக்கிரம் நாம் கண்ணுல் பார்த்து ஆனந்திக்கும்படிச் செய்து வைக்க உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

பின் மகாநாட்டிற்குத் தலைமை வகித்து மாறு சிவகெங்கை, திரு. என். ராமச்சந்திரன் பி. எ. பி. எல். அவர்களை திரு. ஆர். சுப்பையா அவர்கள் பிரரேபிக்க, திருவாளர்கள் சிதம்பரநாதன் பி. எ. பி. எல்., எம். எல். சி, பட்டுக்கோட்டை அழகர்சாமி, எஸ். குருசாமி, முருகப்பர், எ. எஸ். அருணசலம், கோவிந்தன, ஈ. வெ. ராமசாமியார ஆகியவர்கள் மகா நாட்டின் தலைவரைப் பாராட்டியும் அவர்கள் சுயமரியாதை இயக்கத்திற்குச் செய்து வரும் தொண்டு குறித்துப், புகழ்ந்து பேசியும் ஆமோதித்து ஆதரித்தனர், பின் நீண்ட கரகோஷத்துடன் திரு. ராமச்சந்திரன் அவர்கள் தலைமை வகித்தனர். போஜனத்திற்காக மகாநாடு கலைந்தது.

மீண்டும் மகாநாடு மாலை சமணிக்கு கூடியது. விருதுநகர் திரு. சின்னமணி பாகவதர் அவர்கள் ராமசாமிப் பெரியாரின்மீதும் சுயமரியாதை இயக்கத்தின் மீதும் பாட்டுகள் பாடினர். பின் தலைவர் தனது பிரசங்கத்தைப் படித்தார். (அவரது நீண்ட சொற்பெருக்கு மற்றோரிடத்தில் வெளியிடப் பெற்றிருக்கிறது).

பின் "நமது நாடு" என்பது குறித்து திரு. சொக்கலிங்க பாண்டியர் பேசினர். "அறமும் மதமும்" என்பதுபற்றி திரு.

## திருநெல்வேலி சுயமரியாதை மகாநாடு.

தி. ப. சுப்பிரமணியதாஸ் அவர்கள் பேசினர். திரு. பிச்சப்பா சுப்பிரமணியம் அவர்கள் 'பெண்களுக்கு சமஉரிமைபளித்தல்' என்ற பொருள்பற்றி மிகஉருக்கமாகச் சொற்பெருக்கிட்டார் செங்கற்பட்டு தீர்மானங் குறித்த திரு. அழகர்சாமி, எஸ். குருசாமி, இராமசாமிப் பெரியார் ஆகிய மூவரும் நீண்டநேர சொற்பெருக்கு நிகழ்த்தினர். செங்கற்பட்டு மகாநாட்டுத் தீர்மானங்கள் யாவும் படிக்கப்பட்டு ஏகோபித்து ஏற்றுக்கொள்ளப்பட்டன. தலைவர் முடிவுரையுடன் மகாநாடு கலைந்தது.

### வைக்கம்வீரர் படத்திறப்புவிழா.

இன்று மாலையில் மகாநாட்டுக் கொட்டகையில் திருவனந்தபுரம் எஸ். என். டி. பி. யோகத்தின் காரியதரிசி திரு. எம். கோவிந்தன் பி. எ. பி. எல். அவர்களின் தலைமையில் உயர்திரு டி. கே. சிதம்பரநாதன் பி. எ. பி. எல். எம். எல். ஸி அவர்கள் சுயமரியாதை இயக்கத் தந்தை திரு இராமசாமிப் பெரியாரின் திரு உருவப்படத்தைத் திறந்துவைத்தார்.

### திரு. எம். கோவிந்தன்.

திரு. எம். கோவிந்தன் அவர்கள் நிகழ்த்திய பேருரையின் சாரம் வருமாறு:—

பிறப்பினுல் ஒருவனுக்கு உயர்வு தாழ்வு இல்லை யென்பதை நீங்கள் ஆதரிக்கிறீர்களென்று நினைக்கிறேன். சாதிப்பிரிவென்பது அறிவிற்குப் பொருத்த முடையதாக வில்லை. சாதியின் தத்துவங்கள் பண்டை நாளில் ஏதகாரணத்தைக் கொண்டு ஏற்படுத்தியிருந்தபோதிலும் ஜனமுன்னேற்றத்திற்கு அது இப்போது தடைகல்லாகவே யிருக்கின்றது. அது அறை யறையாகப் பிரிக்கப்பட்டு முன்னேற்றத்தைத் தடுக்கிறது. அதை ஒழிப்பது மிகவும் கடினம். வைத்தியர் ஒருவனுக்கு ஏற்பட்டிருக்கும் கட்டியை எவ்விதக் கத்தியைக் கொண்டு ரணமாக வேலைசெய்து அதைப் போக்கடிக்கிறாரோ அதைப் போன்று நாமும் சாதிபேதத்தை ரணமாகவெட்டிப்போக்கவேண்டும். இந்திய மக்கள் முன்னேற்றமடைய சாதிக் கட்டுப்பாட்டை உடைத் தெறிய வேண்டும். மனிதசமூகம் பூராவும் ஒன்றே யென்று ஓர்ந்து அசற்கான வழிகளைத் திறப்பட மலையாள தேசத்தில் தேடிய ஸ்ரீ நாராயணக் குருக்களின் கொள்கை அதுவாகும். அகோடி உலகம் பூராவுமே சமத்துவமாயிருக்க வேண்டுமென்பது அவர்களுடைய முக்கிய நோக்கம் நம் நாடு நிச்சயமாக உரிமையைப் பெற வேண்டுமேயானுல் கட்டாயம் சாதிக்கட்டுப்பாட்டை உடைத்தெறியவேண்டும். இப்பாகங்களில் என் செழுதகை நண்பர் ஈ. வெ. இராமசாமியார் சாதிக் கட்டுப்பாட்டை உடைத்தெறிய வேண்டுமென்ற நோக்கத்தோடு உழைத்து வருகிறுர். நீங்கள் எப்படி அறிவீர்களோ, அதைப் போல் அவரும் சாதிக்கட்டுப்பாட்டின் தீங்கை நன்கு அறிவார். வைக்கம் சத்தியாக்கிரகத்தை அவர் நடத்தும் போது நானும் அவரும் உயிரும் உடலும் போலிருந்தோம். வைக்கம் சத்தியாக் கிரகத்தில் வெற்றி பெற்றபிறகே அவர் சுயமரியாதை இயக்கத்தைத் தோற்றினுர். அவர் தீவிர காங்கிரஸ் வாதியாகவும், தீவிர ஒத்துழையாதார ராகவும் மிருந்தார். கொஞ்ச நாட்களுக்கு முன்பு இவர் எஸ். என். டி. பி. யோகத்தில் 40,000 ஜனங்கள் முன்பு உருக்கத்தோடும், வீரத்தோடும் சொற்பொழிவு ஆற்றினுர். ஜனங்க ளெல்லாம் அமைதியாக விருந்து கேட்டுக் கொண்டிருந்தார்கள். அவராலேயே சுயமரியாதை எங்கள் திருவாங்கூரில் இன்றும் தாண்டவமாடுகிறது. அவரைப் பின்பற்றும் ஒரு பெரிய கூட்டத்திற்கு அவர் தலைவராயிருக்கிறுர். செங்கற்பட்டு மகாநாட்டைத் திறந்து வைக்கும் போது டாக்டர் சுப்பராயனவர்கள் சமூக சுதந்தரமின்றி அரசியல் சுதந்தரம்அடைய முடியாதென்றும் சமூக சமரியமடைதை, சுயராச்சிய மடைய அவசியமென்றும் கூறினுர். ஆனுல் நான் சொல்வது சுயாராச்சிய மில்லாவிட்டாலும் சுயமரியாதை அவசிய மென்று சொல்கிறேன். நாகரிக மடைந்த பிற நாட்டார் நம்மைப் பார்த்து எள்ளி நகைக்காம லிருப்பதற்கும், பிறநாட்டார் போல் நாமும் முற்போக்கடையவுமே இந்த இயக்கத்தைத் தோற்றியிருக்கிறுர். நமக்கு அவருடைய 'தோற்றமே ஊக்கத்தையும் உறுதியையும் உண்டாக்குகிறது. அவருடைய ஞாபகத்தை நாம் கொள்ளுவதற்காக அவருடைய படத்தைத் திறக்கும்படியாக திரு. டி. கே. சிதம்பரநாதனவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

### திரு. டி. கே. சிதம்பரநாதன்

இராமசாமிப் பெரியாரின் திருவுருவப் படத்தைத் திறந்து வைக்கு முகத்தான் திரு. டி. கே. சிதம்பரநாதன் பி. எ. பி. எல், யம். யல். ஸி. அவர்கள் நிகழ்த்திய சொற்பெருக்கின் ஒருபகுதி வருமாறு:—

சகோதர சகோதரிகளே! எனக்கு இராமசாமிப் பெரியாரது படத்தைத் திறக்கும் படியான பெரியதோர் பாக்யெத்தைத் தந்திருக்கிறீர்கள். அந்தப் பாக்யெத்தைத் தந்தவர்களுக்கு என்னுடைய மனமார்ந்த வந்தனம் உரியதாகுக. அன்புடன் நீங்கள் தந்த இராமசாமிப் பெரியார் படத்தைத் திறக்கும் பாக்யெத்தை இன்பமுடன் அடைந்த என்னிடம் தலைவரவர்கள் சிறிது நேரத்திற்கு முன்பு தாம் இராமசாமிப் பெரியாரது படத்தைத் திறக்க வேண்டுமென்றும், நான் தலைமை வகிக்க வேண்டு மென்றும் சொன்னுர்கள். அதற்கு நான் "நீங்கள் தான் தலைமைவகிக்க வேண்டும். நான் தான் படத்தை திறப்பே" னென்றேன். திரும்பவும் அவர்கள் என்னைக் கட்டாயப் படுத்தினுர்கள். நான் முடியவே முடியாதென்று வண்டன்போல் சாதித்து விட்டேன். இதிலிருந்தே, இராமசாமிப் பெரியாரது படத்தைத் திறப்பதில் ஓர் பெருமை யிருக்கிற தென்பது நனி விளங்குகிறது. இராமசாமிப் பெரியாரை எல்லோரும் ஒரு சிறு குழந்தை முதல் "பெரியார், பெரியா" ரென்றே அழைக்கின்றுர்கள். "பெரியார்" என்ற சொல்லுக்கு ஆங்கில இலக்கியத்தில் ஓரிடத்தில் "அவர் சிலரால் வசைப்பட்ட வனுகவும், சாபமிட்டவனுகவும், வெறுக்கப் பட்டவனுகவு மிருக்க வேண்டும்' என்ற பொருள் கூறப்பட்டிருக்கிறது, நமது இராமசாமியார் இவ்வளவையும் பெற்றவர். இந்த இலக்கணத்தினுலேயே நாம் அவரைப்பெரியாரென்று சொல்லிவிடலாம். பின்னும் நம் இராமசாமியார் கதர் புரட்டையும் சுயராச்சியப் புரட்டையும், சமயப் புரட்டையும், சமூகப் புரட்டையும் தெளிவாக வெளிப்படுத்திப் பிற நாட்டார்களைப் போல் நம்மை முன்னேறும்படியாகச் சொல்லுகிறுர். இதனை நம்மில் சிலர் வெறுத்து அசட்டை செய்கிறுர்கள். திருமூலர் தம்முடைய திரு மந்திரத்திலே,

"குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ளார்
குருட்டுக் குருவைக் குருவியர் கொள்வர்
குருடும் குருடும் கூட்டாட்டம் கொள்ளும்"

என்று சொலவி யிருக்கிறுர். அதைப் போல நம்மில் குருட்டு நம்பிக்கையைக் கொண்டு கூட்டாட்டம் ஆடுகிறுர்கள். அவர்களைப் பற்றி நமக்குக் கவலை யில்லை. நாம் யாவரும் குருட்டு நம்பிக்கைகளை யெல்லா மொழித்து முன்னேற்றமடைவோம். நாம் முன்னேற்றமடைய மிகுந்த சிரமத்தோடு உழைத்துவரும் நம் பெரியார் இராமசாமியாரது படத்தைத் திறந்து, வைக்கிறேன். (கரகோஷம் "இராமசாமிக்கு ஜே", "சுயமரியாதைக்கு ஜே" என்ற முழக்கம்.)

### இரண்டாம் நாள்.

காலை 10 மணிக்கு சுயமரியாதைச்சைவ மெய்யன்பர் மகாநாடு ஆரம்பமாயிற்று. நாகர் கோயில் திரு. சிதம்பரனுர் அவர்கள் தமது வரவேற்பு பிரசங்கத்தைச்செய்தார். சாத்தூர் திருவாளர் T. S. கந்தசாமிமுதலியார் B. A. தலைமை வகித்து அருமையான சொற்பொழிவாற்றினுர். குமரன் ஆசிரியர் திரு. முருகப்பர் சைவமும் சமூகசீர்திருத்தமும என்பது பற்றி ஒரு மணி நேரம் ஒரு உபந்நியாசம் செய்து பட்டுக்கோட்டை மகாநாட்டில் செய்யப்பெற்ற தீர்மானங்களை ஆதரிக்கும்படி கூறினுர். அத்தீர்மானங்கள் ஏகமனதாக அங்கீகரிக்கப் பெற்றன. தலைவர் சிறிதுநேரம் முடிவுரையாக உயர் பொருள் பலவற்றையும் பற்றிப்பேசினுர். இவ்வளவோடு முடிவுற்றது.

### பிற்பகல்.

சுயமரியாதைத் தொண்டர் மகாநாடு பிற்பகல் 3-30-க்கு ஆரம்பமாயிற்று திரு சாத்தன்குளம் எ. ராகவன் அவர்கள் தமது வரவேற்புப் பிரசங்கத்தைச் செய்தார். பட்டுக்கோட்டை திரு. ப. க. தண்டபாணியவர்கள் தலைமை வகித்துத் தமது முகவுரைப் பிரசங்கத்தைச் செய்தார். அருப்புக்கோட்டை திரு கி. கருப்பையா அவர்கள் பொன்னம்பலனுர், ரிவோல்ட் குருசாமி அவர்கள், மூவலூர் திரு. ராமாமிர்தத்தம்மாள், பட்டுக்கோட்டை அழகிரிசாமி அவர்கள், எஸ். வி. லிங்கம் அவர்கள், பிச்சப்பா சுப்பிரமணியம், சொ. முருகப்பா, ஈ.வெ. ராமசாமியார்ஆகியவர்கள் பேசினுர்கள்பட்டுக்கோட்டைத்தீர்மானங்கள்ஏகமனதாக அங்கீகரிக்கப்பட்டன. திரு. மரகதவல்லி-முருகப்பர் கல்யாணத்தைப் பாராட்டுவதாக ஒரு தீர்மானம் தலைவரால் கொண்டுவரப்பட்டு ஏக மனதாகத் தீர்மானிக்கப் பெற்றது.வரவேற்புக்கழகத்தலைவர்எல்லோருக்கும் வந்தனமளித்தார். பூ மாலைகள் அணிவிக்கப்பெற்றன. மகாநாட்டுக்கு 1000 ஜனங்கட்குமேல் வந்திருந்தனர். மகாநாடு வெற்றியோடும் குதூகலத்தோடும் நடைபெற்றது. ஞாயிற்றுக்கிழமை முழுமையும் நெல்லையப்பர்கோவிலை கோவில் அதிகாரிகள் அடைத்துப் போட்டுவிட்டனர்.

### திருநெல்வேலி.

22—7—29.

எஸ். வி, லிங்கம், ப. க. தண்டபாணி, நடராஜர், செட்டோ, அழகிரிசாமி, குருசாமி முதலியோர் நாகர் கோவிலுக்குச் செல்கின்றனர். திரு. ராமசாமிப்பெரியார், ராமாமிர்தத்தம்மாள், பொன்னம்பலனுர், எ. எஸ். அருணசலம், பாலகுருசாமி ஆகியோர் இன்று திருக்குற்றாலம் செல்கின்றனர். திரு. முருகப்பர், மரகதவல்லியார் பிச்சப்பா சுப்பிரமணியன், திரிகூடசுந்தரனுர் முதலியோர் நாளை குற்றாலஞ் செல்வர்.

### குற்றாலம்.

(நமது நிருபர்)

ஜுலை ௨௩ ௨

காலநிலை திருப்திகரமா யிருக்கிறது, மழை பெய்யும்போது சூரிய வெளிச்சமும் நன்றாய்த் தெரிகிறது. ஒருமாத காலமாய் இங்கு முகாமிலிருக்குமதிருநெல்வேலி ஜில்லா கலக்டர் தினந்தோறும் அருவிக்கரைகளைப் பரிசோதிக்கிறுர். அவரிருப்பதால் எவருக்கும் எவ்விதத் தொந்தரவு மில்லை.

நேற்று ஒரு கூட்டத்தார் மலையில் ஏறித் தேனருவி பார்க்கச் சென்றனர் அங்கிருந்து அருவி வீழ்வதைப் பார்த்துக்கொண்டிருக்கும பொழுது ஒருவன் தவறிக் கீழே வீழ்ந்துவிட்டான். நீர் வீழ்ச்சியில் விழாததால் தப்பித்துக் கொள்ள முடிந்தது. ஒரு மரத்தை வெட்டி நீரில் போட்டார்கள். அதைப் பிடித்துக் கொண்டுக் கரை சேர்ந்தான். சொற்பக் காயம் ஏற்பட்டது.

### தென்மாப்பட்டிற்கு சுயமரியாதைத் தலைவர்களின் விஜயம்.

நிகழும் சுக்ல ஆண்டு ஆடித்திங்கள் 27ம் நாள் 11—8—29 காரைக்குடியில் நடைபெறும் இராமனுதபுரம் ஜில்லா முதல் ஆதித்திராவிட மகாநாட்டிற்கு விஜயம் செய்யவிருக்கும் பெரியார்களாகிய உயர் திரு. E. V. ராமசாமிப்பெரியார் அவர்கள், 'திராவிடன்' ஆசிரியர் J. S. கண்ணப்பர் அவர்கள், இராமனுதபுரம் ஜில்லா போர்டு பிரசிடெண்டு உயர் திரு. சௌந்திர பாண்டியம் அவர்கள் M. L. C., சிவகெங்கை வக்கீல் உயர் திரு. இராமச்சந்திரன் அவர்கள் B. A. B. L. முதலிய தலைவர்களை இவ்வூருக்கு ஆடித்திங்கள் 28ம் நாள் (12—2—29) ல் அழைத்து வர ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. இவ்வூர் வாசிகளும் சுற்றுப்புறக்கிராமவாசிகளும் மேற்படி பெரியார்களின் மேலான வருகையை மிகுந்த ஆர்வத்துடன் எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறுர்கள் என திரு. அ. சோமசுந்திரன் அறிவிக்கிறுர்.





அன்பர்களே! அரிய கட்டுரைகளைப் படிக்க விரும்பினுல் குமரனை வரவழையுங்கள்.

## நமது தபால்பெட்டி.

### தேவகோட்டை.

சரஸ்வதி வாசகசாலை:—சுக்கில ஆண்டு ஆடித்திங்கள் முதல் நாள் செவ்வாயன்று பிற்பகல்டுமணிக்கு திருநெல்வேலி தேசபக்தர் திரு பொ. திரிகூடசுந்தரம்பிள்ளை M.A. B.L. அவர்கள் தலைமையில் இவ் வாசகசாலையின் மூன்றாவதாண்டு நிறைவுவிழா இந்நகர்நகரத்தார் மண்டபத்தில் ஆரம்பிக்கப் பெற்றது. மண்டபத்தின் உட்புறம் செடி, கொடிகளாலும் பலநிறக் கதர்க்கொடிகளாலும் அலங்கரிக்கப்பெற்றிருந்தது காண்போர்கண்ணைக்கவர்ந்து நின்றது. வெளியூரிலிருந்து பல அன்பர்கள் வந்திருந்தனர். தலைவரவர்கள் தனக்கென அமைத்திருந்த ஆசனத்தமர்ந்ததும் இந்நகர் சொ. பெ. பாடசாலை மாணவிகள் கடவுள் வாழ்த்துப் பாடினார்கள். திரு. சோம. இராமனுதன் அவர்கள் தலைவரவர்களைத் தலைமைவகித்து விழாவை நடாத்திவைக்கும்படி கேட்டுக்கொண்டார்கள். திரு. அ. சுவாமிநாதனால் நல்வரவேற்புத்தாளும் காரியதரிசி வீர. சொக்கலிங்கம் அவர்களால் அறிக்கையும் வாசித்துத் தலைவரவர்களுக்கு அளிக்கப் பெற்றன. தலைவர் முன்னுரையாக சமயம் அரசியல், ஜீவகாருண்யம் ஆகியவை குறித்து நுண்ணிய ஆராய்ச்சியுடன் பேருரை பகர்ந்து பெருமகிழ் வளித்தனர். பிறகு சொ. பெ. பாடசாலை மாணவி ஸ்ரீமதி இராம சிலம்பாயி "கல்வி" என்பது பற்றியும் காரைக்குடி திரு. ஆ. வி. லெ. அருணாசலன் அவர்கள் "ஆண்மை" என்பது பற்றியும் மதுரை திரு. பி. ஸ்ரீ ஆச்சாரியாரவர்கள் "கல்வியின் பொருளும் பயனும்" என்பது பற்றியும் திரு. தி. ம. நடராஜன் அவர்கள் (ஊழியன் உதவியாசிரியர்) "இளைஞர் இயக்கம்" என்பது பற்றியும் சொற்பெருக்கிட்டார்கள். தலைவரவர்கள் முடிவுரை கூறியதும் சொ. பெ. மாணவிகள் வாழ்த்துப் பாடினார்கள். திரு. சோம. இராமனுதன் அவர்கள் வந்தனங் கூறியதோடு தலைவரவர்கட்கும் சொற்பொழிவாளர்கட்கும் பூமாலை சூட்டினர். தெய்வ வழிபாட்டுடன் வந்திருந்தோரனைவருக்கும் சந்தனம் கற்கண்டு வழங்கப் பெற்றுக்கூட்டம் இரவு கoமணிக்கு இனிது முடிவுற்றது.

சொர்ணமூர்த்தி பெண்பாடசாலை:—

இப் பாடசாலையை இம்மதி இரண்டாம் நாள் முற்பகல் திரு. திரிகூடசுந்தரம் பிள்ளையவர்கள் வந்து பார்வையிட்டனர். அது காலை மாணவிகள் பஞ்சு பிய்த்து வெட்டி திரைப்போட்டு இராட்டில்நூற்றுக் காண்பித்தார்கள். நூர்க்கும் பொழுது இராட்டுப்பாட்டுப் பாடிக்கொண்டுநூற்றது ஒவ்வொருவரின் உள்ளத்திலும் நூற்க வேண்டியது அவசியம் என்னும் உணர்ச்சியை எழுப்பும் நிலையிலிருந்தது. பாடசாலைத் தலைமை யாசிரியர் திரு. இராட்டினப் புலவரவர்கள் நூர்க்கும் திறமையை மாணவிகளுக்கு மிகமிக நன்றாகப் போதித்திருக்கிறார்கள் என்பது மாணவிகள் நூற்றுக் காண்பித்த நூலினின்றும் அறியக் கிடக்கின்றது. திரு. சுந்தரனார் மாணவிகளுக்குக் கதரின் அவசியம் பற்றிக்கூறிய போது இராட்டினப்பாட்டை இன்புறப்பாடி நூற்றக்மட்டும் தமக்குமகிழ்ச்சியையூட்டாதென்றும் ஒவ்வொரு மாணவியும் கதருடையணிந்து காண வேண்டுமென்றும் பிற்காலத்தில் தாமாக நூற்று செய்து உடுத்திக் கொள்ளும் நிலைக்கு மாணவிகளைப் பயிற்றுவித்தல் வேண்டுவது மிக அவசியம் என்றும் புத்தகப் பாடத்தால் மட்டும் நன்மை கிடைத்துவிடாது எனவும் இயற்கைக் கேள்விகளுடன் விடையுமகொடுத்து போதித்தல் வேண்டு மெனவும் கூறினார்கள் என வாசகசாலைக்காரியதரிசி திரு. வீர. சொக்கலிங்கம் அறிவிக்கின்றார்.

— —

